694

உ

# ஸ்ரீ பாரதசார வெண்பா



அருட்டிரு. வி. சோமசுந்தர சுவாமிகளின் மாணவர்

**S. பெருமாள் சுவாமிகள்**

இயற்றியது.

---

வெண்ணுக்குடி திரு. தீ. மருதப்ப தேன்கொண்டார் அவர்கள்

பொருளுதவியால்

தஞ்சைக் கூட்டுறவுப் பதிப்பகத்தில்

பதிக்கப்பட்டது.

1947

ரூ. 1/-

உ

# ஸ்ரீ பாரதசார வெண்பா



அருட்டிரு. வீர. சோமசுந்தர சுவாமிகளின் மாணவர்

S. பெருமாள்சுவாமிகள்

இயற்றியது.

வெண்ணுக்குடி திரு. நீ. மருதப்பா தென்கொண்டார் அவர்கள்

பொருளுதவியால்

தஞ்சைக் கூட்டுறவுப் பதிப்பகத்தில்

பதிக்கப்பட்டது.

1947

ரூ. 1/-

69-A

# சிறப்புப்பாயிரம்.

—(o)—

1. செந்தமிழ்த்தாய் மைந்தர்தமுட் சேருங் கலைநுட்பம்
முந்துதிறல் உள்ளமுதல் மூன்றென்றல்—நந்தம்
பெருந்தமிழ்த்தொண் டான்ற பெருமாள் அடிகள்
தருமுலகப் பேறிந்நூல் தான்.

2. வல்லா ரினிதளித்த மாபா ரதவளங்கள்
பல்லாருங் கண்டுபயன் பற்றுதற்கே—சொல்லும்
பொருளும் எளிதாப் பொருந்துவர லாறே
டருளியதிந் நூற்சிறப்ப தாம்.

3. பாரதமா! பாரதஞ்செய்! பன்னுமிரா மாயணமா!
சேரதுதி மாயணத்திற் சேர்த்தி!யெனப்—பாரார்தாம்
சொல்லுங் கருத்துணர்ந்து சோராதே யெவ்வெவரும்
புல்லுதற்கா மிந்நூற் பொருள்.

4. பொருளிடம் காலம் பொருந்தா தனவா
வருமிடங்கள் மாற்றி வரலாற்—றுறுமுண்மை
கண்டே கவிசெல்லும் கட்டாண்மை ஆங்காங்கே
உண்டாய் மிகுசீர் உறும்.

5. இன்ன பலவளங்கள் எய்தும்வெண் பாமலிந்த
தன்னிகரில் பாரத சாரமிது—மன்னூழி
செம்மை யுறவாழி! சேரருளா லிஃதளித்த
நம்மடிகள் வாழியரோ நன்கு!


கரந்தைக் கவியரசு
அரங்க. வேங்கடாசலம் பிள்ளை,
கல்லூரித் தலைவர்,
கரந்தைப் புலவர் கல்லூரி.


தஞ்சை
17—5—'47



உ

ஸ்ரீ-விபுலானந்த சுவாமி

# முகவுரை

பரத கண்டத்தில் வழங்கும் பழைய வரலாருகிய பாரதக் கதையினைப் பண்டைத் தமிழ்ப் புலவருளொருவராகிய பெருந்தேவனுரென்பார் இனிய தமிழ்ப் பாக்களால் மொழிபெயர்த்து இயற்றியுள்ளார். அவரது நூலிலிருந்து ஒரு சில பாடல்களே இப்போது கிடைத்துள்ளன. பின் வந்த வில்லிபுத்தூராழ்வார் வியாசர் இயற்றிய மாபாரதத்தினை முதனூலாகக்கொண்டு இனிமையும் தெளிவும் பொருந்த இக்கதையினை விரித்து விருத்தப்பாவில் நூல் செய்துள்ளார். மக்கள் வாழ்க்கையிற் காணப்படும் இன்ப துன்ப வுணர்வுகளை யாவரும் உணருமாறு சந்தத் தமிழ்ப் பாடல்களால் விளக்கு முறையில் தன்னிகரற்ற புலவர் வில்லிபுத்தூராழ்வாராவர். இவரது நூலைப் பின்பற்றி நல்லாப்பிள்ளை யென்பாரும் விருத்தப்பாவில் விரிந்த நூல் செய்துள்ளார். என்றுலும் வில்லிபுத்தூரார் பாரதமே இலக்கியச்சுவை நலங்களிற் சிறப்புற்றுப் பலராலும் பயிலப்பெறுவதாகும். இவ்விரு நூல்களும் ஆயிரக் கணக்கான செய்யுட்களையுடையனவாய் விரிந்து நிற்றலின் இவற்றிற் சொல்லப்படும் பாரதக்கதையினையும் அதன்கண் விளங்கித்தோன்றும் நீதிகளையும் எல்லோரும் எளிதில் உணர்ந்துகொள்ள இயலாமையை யுணர்ந்த அருண்மிகு. பெருமாள் சுவாமிகள் அவர்கள் பாரத சாரமாக வெண்பா யாப்பில் இவ்வினிய செய்யுள் நூலை இயற்றி யுதவியுள்ளார்கள். நீதிநூற் கருத்துக்களைச் சுருக்கமுந் தெளிவும் பொருந்த எடுத்துரைக்கும் முறையிற் சிறந்து விளங்குவது வெண்பாயாப்பொன்றேயாம். சுருக்க நூலாகிய பாரத சாரத்திற்கு வெண்பாயாப்பினைத் தேர்ந்துகொண்டது இந் நூலாசிரியரது செய்யுட்டிறனை யினிது புலப்படுத்தும். இந் நூலின் வெண்பாக்கள் ஓசை நயமும் பொருட்டெளிவு முடையனவாய் அமைந்துள்ளன வென்பதனை இதனைப் பயில்வோர் நன்குணர்வர்.

பழைய கதையின் நிகழ்ச்சியினை முதல் நூலில் உள்ளவாறே சொல்லி விடாமல் உலகியலுக்கும் மக்க

ளுணர்வுக்குட் ஒத்த வண்ணம் கதை நிகழ்ச்சியினைச் சிறிது மாற்றி நயம்பட விளக்குந் திறம் நம் சுவாமிகளிடமுண்டு. இவ்வியல்பு, நச்சுப்பொய்கைச் சருக்கம் புட்ப யாத்திரைச் சருக்கம் முதலியவற்றின் நிகழ்ச்சிகளை இந் நூலாசிரியர் எடுத்தாண்ட முறையால் இனிது புலனும். இவ்வாறே இக்கதையிலுள்ள வேண்டாத நிகழ்ச்சிகள் சிலவற்றைச் சுருக்கும் முறையிற் குறைத்தும் இனிய அறவுரைகளைத் தெளிய விளக்கியும் இந்நூலை இயற்றியுள்ளார்கள்.

இந் நூலாசிரியராகிய சுவாமிகள் தம் குருமூர்த்தியாகிய சோமசுந்தர சுவாமிகள் மீது நெஞ்சுவிடு தூதும் உலாவும் ஆகிய இரு பிரபந்தங்களைச் செந்தமிழ்ச் சுவை நலங் கெழுமப்பாடியுள்ளார்கள். புலமைத்திறன் மிக்க சுவாமிகள் நம்நாட்டிற்கும் தமிழ் மொழிக்கும் தளராதுழைக்கும் தாளாண்மை யுடையோராவர். மெய்யுணர்வின் வழிப்பட்ட நன்னடையுஞ் செந்தமிழ்ப் புலமையும் அருளுணர்வும் ஒருங்கு அமையப்பெற்ற சுவாமிகள் இவ்வாறே இன்னும் பல செய்யுள் நூல்களை யியற்றித் தமிழன்னையின் திருவடிகட்கு அணிந்து மகிழுமாறு அவர்களைப் பணிவுடன் வேண்டிக்கொள்கின்றேன்.

சுவை மலிந்த இந் நூலினைத் தமிழ் மக்கள் பயின்று இன்புறுவாராக.

இங்ஙனம்,

அண்ணாமலைப்பல்கலைக்கழகம்,
17—5—'47,

க. வெள்ளைவாரணன்,
தமிழாராய்ச்சிப்பகுதி,



குறிப்பு:— 40-வது பக்கம் 382ம் செய்யுளுக்குப் பின் 385-வது (இன்னொரறியா) என்னும் செய்யுளை சேர்த்துக் கொள்ளவேண்டும்.

ஸ்ரீ மகாகணபதி துணை

# பாரத சாரமென்னும் பாரதவெண்பா

### காப்பு.

ஏடா வடமேரெழுதுகோ றன்னுடைய
கோடா வியாதமுனி கூறுவன—நாடியே
முத்தே எனப்பொறித்த முன்பா! யிபமுகத்து
வத்தேகா என்னுளத்தே வந்து.

வெண்டா மரையிருந்து வெண்டு சணிந்தின்பங்
கொண்டாளே வேதக் கொழுகொம்பே—பண்டையதாம்
பாரதத்தை வெண்பாவிற் பாடுதற்கு வந்தெனது
நாரதத்தே நிற்பாய் நனி.

பார்மகட்கு நாயகனே பார்த்தனெழிற் சாரதியே
கார்நலத்த காயா மலர்காவி—சேர்நிறத்த
எட்டெழுத்தி னுட்பொருளே இன்பாரத வெண்பாக்
கட்டுரைக்க நற்றுணைநின் கால்.

பாரதத்தை வெண்பாவாற் பாடுதற்குச் சுந்தரனூர்
நாரகத்தே தங்கு நலக்கிளியே—பாரகத்தில்
ஓங்கு தமிழ்க்கூடல் உயருமெங்கள் சேற்கணியே
மாங்குயிலே யீவாய் வரம்.

### அவையடக்கம்

மண்பா லறித லறியாத மாண்புடையேன்
வெண்பாவாற் பாரதத்தை விள்ளுவது—தண்பாவில்
மோனைப் புலவர்முன் மூடிகஞ் சேவகத்தை
யானைக்குச் செய்திடலே யாம்.

### நூல்.

### ஆதிபர்வம்

திங்கள் மகன்புதனுந் தெய்வத்தா லாமிளையு
மங்குல் புரைபுரூர வாவிணையே—யிங்களித்தார்
அன்னேனல் ஊர்வசியை யாவலித்த தானவரை
பொன்னுடர் போற்றவென்றான் போந்து. 1

ஊர்வசியும் வானவர்கோன் உள்ள மறிந்தண்மி
பேரிகலா ராயுவினைப் பெற்றெடுத்தாள்—பாரிலவன்
தன்னிகரி லாநகுடற் றந்தா னவனூறு
பொன்மகத்தால் வானடைந்தான் போய். 2

மூவுலகுக் கோர்பதியாய் மூவா வமிழ்தமுண்ட
தேவரெலாம் வந்திறைஞ்சச் சென்றவவன்—பாவைசசி
தாபத்தாற் சர்ப்பவெனத் தாங்குங் குறுமுனிவன்
சாபத்தால் பாம்பானான் முன். 3

ஈங்கிவன்ரு னீன்ற யயாதியெனு மன்னவன்ருன்
ஓங்கு நலமுற்ற உசனர்பெண்—பாங்கியொடு
வந்துமனே யாளாய் மருவவவ ளோடுறவாய்ப்
புந்திமகிழ் வுற்ருன் புனேந்து. 4

சுக்கிரனர் பெண்வயற்றில் தோன்றினர் வந்திருவர்
மிக்கவழ குள்ளசன் மிட்டைதான்—தக்ககுண
பூருவொடு மூன்று புதல்வரைத் தானின்ருள்
சேருயர்யா மோர்மணத்தாற் றேர்ந்து. 5

வெள்ளிமகள் வாயால் விரிவாய்ச் சொலக்கேட்டுக்
கள்ளப் புணர்ப்பேனக் காவலர்க்கென்—றுள்ளத்தே
நொந்திட்டான் சாபத்தை நோயோடு மூப்பாக
வந்திட்டு நின்றதது மன். 6

மூப்பால் மிகவருந்தி மூன்றிரண்டு மக்களேயும்
கூப்பினி ரென்னுடையக் கொண்மினெனக்—கோப்பிணியை
ஏற்க மறுத்தார்கள் ளிரிருவர் பூருவுந்தான்
கோக்கிளமை யீந்தானக் கோ 7

யாண்டுபல யின்பமதை யெய்திப்பின் பூருவிற்கு
வேண்டிளமை யோடுமுடி வெண்குடையும்-பூண்டினிமேல்
நீயே சசிகுலத்தின் நேர்நிருப னுவையென
மேயபா ரீந்தானுன் விண் 8

பூருவும் பன்னெடுநாள் பூமிபரி பாலித்துக்
காருவும்பின் வாங்குகொடைக் கையானுப்—பேருள்ள
கோவாம் பரதனெனுங் கொற்றவனேத் தானின்ருன்
தேவருங்க ளிக்குமந்த சேய். 9

வென்றி புகழ்நீதி மேன்மை யுறும்பரதன்
குன்ருப் புகழுத்திக் கோவின்ருன்—தன்ருதை
யிட்டதன்பே ரோங்க யினியகக ருண்டாக்கி
யிட்டான்றன் பேரதற்கே யேய்ந்து. 10

இக்குலத்தி லுற்ருேர்க ளெண்ணில ரேகுருவு
மக்குலத்தோன் கீர்த்திநல வாபரணன்—திக்குளசீர்
மன்ன ரெலாமிடைடி வந்திக்கு நற்குணத்தால்
தன்குலக்குத் தன்பெயரீந் தான். 11

ஆய குலமதனில் சந்தனுவந் தாளானுன்
தாயவுளத் தானுயருந் தோளூரத்தான்—சேயமா
கான்சேர்ந்தோர் நண்பகலிற் கங்கைக் கரையினிது
தான்சேர்ந்தான் வேட்டைகுறித் தான். 12

கங்கை யழகுகனி கண்ணுற்ரு னவ்வமையம்
மங்கை யொருத்தியங்கு வந்தொதுங்கச்—சங்கையுடன்
எவ்வுலகா ளென்றே யினேந்திமையாற் ருனேர்ந்து
நவ்விநீ யாரென்ரு னல். 13

வேதாவின் சாபத்தால் விண்ணிழிந்து வந்தனென
வோதாமு னெற்கே யொருப்படினீ—பேதாய்கேள்
யிந்தவுல குன்னதென யேற்பேனென் றீவிரத
முந்திநீ கொள்ளின் முணைந்து. 14

தன்னைமறந் தோமென்றான் சந்தனுவும் தன்சீர்த்தி
பின்ன முறலறியான் பேதுற்றான்—மின்னலையே
ஒத்தாளைத் தேரினிற்கொண் டூர்புகுந்தான் கான்வதியும்
மத்தாணை நேரான மன். 15

சந்திரனு ரோகணியும் போலத் தழுவிநிற்க
வந்த மகவேழும் மாய்த்திட்டாள்—நந்தவகை
கங்கை யிடுமிவளைக் காதலித்தல் நன்றுகொலோ
மங்கைமதி யென்ன மதி. 16

என்றுலக மேசிநிற்ப யீர்ங்கொடிதா னப்பொழுது
குன்றாப்போர் தோள்வலிகொள் கோமானை—பின்றாத
மெய்ம்மை யறிவானை வீட்டுமனை யீன்றெடுத்தாள்
செம்மையிறை வன்றெறிந்து சேர்ந்து. 17

எட்டா மகவேனு மிக்குலத்தின் வித்தாக
விட்டா லுனக்குமிகு மேன்மையென—தொட்டடியில்
வந்தித்தான் பல்கால் வழுத்தினான் அன்னவட்கு
முந்தித்தான் சொன்ன லுனி முன். 18

என்னுயிரே கண்ணிற் கினியாளே காதலியே
பின்னமற வேண்டுவதும் பிள்ளையே—அன்னையே
நீதருவா யென்றென்றே நீரருவி கொள்ளவிழி
கோவருந்தி நின்றான் குலைந்து. 19

கண்டா ளிறைதுயரங் காவலனே யிம்மகவும்
கொண்டல் வசுவசிட்டன் கோவதனால்—வுண்டான
பாரிருக்க வேண்டுமிவன் பாரதப்போ ருண்டதனில்
சேருமிவ னாலனந்தஞ் சீர். 20

மன்னனிடங் கூறி மகவோடு தான்சென்றாள்
அன்னை தடிந்திட்ட வம்முனிபால்—பன்னுகலை
வேதமுதற் கல்வியொடு வேந்தருக்கா நற்கலையும்
போதநனி கற்க்விட்டாள் போய். 21

தந்தை செயுஞ்செயலை தானியற்றி வீடுமனைத்
தந்தைபா லுய்த்தாளே சந்தனுவுஞ்—சிந்தையுடன்
வேட்டைக்குப் பின்பொருநாள் மேவித் திரும்புங்கால்
பேட்டனையாள் கண்டாய்ந்தான் பின். 22

பாகனால் பெண்பெற்றோன் பாற்சென்று சொன்னதெலாந்
தாகமாய்க் கேட்டுத் தயங்கியே—யேகினான்
தந்தை செயலறிந்து தான்சென்றத் தேரினிலே
எந்தைக்கா நோன்புகொள்வே னென்று. 23

எம்பியற்கே செங்கோலை யீந்துவடு வாயிருப்பேன்
கொம்பை யருளென்று கூட்டியே—பம்புபுனல்
சேய்வந்து தந்தைக்குச் செப்பி மணமுடித்தான்
ஆய்தந்த துன்ப மற. 24

தந்தைக்குத் தன்னிளமை தந்தமக விற்சிறந்தோய்
இந்த வுடலோடிருக்க வெத்துணைநாள்—சிந்தையோ
அச்ச! நீ வாழ்கநனி அத்துணையு மென்றுறைந்தான்
மச்சகந்தியோடு மகிழ்ந்து. 25

சித்திரதன் சித்ராங்கன் செப்பிருசே யின்றுமனன்
சித்திபெற்றான் முன்னோனைச் சேயிரண்டு—நத்தியே
வில்வித்தை யுங்கற்றவ் வீடுமனு லிவ்வுலகச்
செல்வத்தை யும்பெற்ற தேர்ந்து. 26

தேசமன்னர் கன்னி சுயவரத்திற் சேர்க்வென
காசிமனன் ஓலைதனைக் கையனுப்ப—நேசமுறும்
ஐம்பத் தறுவ ருடனடைந்தார் வீடுமனுந்
தம்பியருங் காசித் தலம். 27

கூடு மரசர் குழுவாய்ந்து பூமாலை
சூடுவான் சென்றவர்கள் தோன்றலுமே—வீடுமனூர்
முக்கனியுந் தேரேற்ற வந்த முடியரசர்
வுக்கிக் குலைந்தா ருளம். 28

தம்பினர்க்கப் பெண்மணக்கச் சாற்றினன் முன்னவளு
மன்னவநீ ஏற்றால் மணஞ்செய்வேன்—மன்னலையேல்
இம்மை தனிநோற்றே யெய்தும் பிறவிதனில்
நும்மை யழிப்பேனென்றாள் னொந்து. 29

மற்றிருவர் தம்மை மணஞ்செய்தான் தம்பினர்க்குக்
கற்றாரைப் போலவருங் காலித்தார்—மற்றிவர்தாம்
என்னையெம் பேர்கொண்ட தென்றிரண்டு யாழ்வல்லோர்
அன்னாரைக் கொன்றாரோ ரல். 30

தம்பியர்கள் வித்யா தரரா லுயிர்மடிய
கொம்பனையார் பிள்ளையின்றிக் கோடைபெற—பம்புமணக்
கந்தியுயர் விட்டுமன்பால் கான்முனைக்காச் சென்றுநலம்
எந்தவகை யோங்கு மென. 31

வேதம் வகுத்த வியாதனால் லுன்னினைவு
சாதகமா மென்றுசொலத் தாயவளு—மாதரவாய்
முன்மகனை யுன்னவவன் முந்துற்றுத் தாய்மொழிக்கா
மன்மகளிர்ச் சேர்ந்தான் வலிந்து. 32

சேர்ந்தபினர்த் தாயடையச் சேர்ந்தே னோரான்மெய்வலி
சார்ந்தாலுங் கண்ணிழந்து தான்பிறக்கு—மோர்ந்தேகொள்
பின்பிறக்கும் பிள்ளை பெரும்பாண்டு வாய்ப்பிறக்கும்
என்புறத்திற் குற்ற மிலை. 33

என்றுசொல யேங்கிநின்று என்மகனே நின்பெருமை
நன்றறிவா ரோவந்த நாரியர்கள்—என்றலறப்
பின்னருமே கூடிப் பிறக்கு மகவிதென
அன்னமுனி சென்றதற்பி னுங்கு. 34

வித்தையெலாங் கற்பித்து மேன்மைகொள முன்னேனுங்
கொத்தைமுடி சூட்டியிளங் கோப்பாண்டு—நத்துவகை
சேனை புரக்கத் திரவிதுர னல்லமைச்சுத்
தானமுறத் தாதையமைத் தான். 35

குந்திபோ சன்றுன் கொலுவிருக்கு மோர்நன்னாள்
முந்துருவாங் கோப முனிவந்தான்—தந்தலையால்
அன்னனற் கால்பணிந்து அண்மியன கூறென்றான்
சொன்னனே ராண்டிருக்குஞ் சூள். 36

அவ்வணமே யாகென் றருமந்த புத்திரியை
நவ்வினீ குற்றேவல் நன்முனிக்குச்—செவ்வையுடன்
ஆற்றுகசென் றாற்றுவையே லாண்டருள்வா னென்றுதிரஞ்
சாற்றி விடுத்தான் தனி. 37

வேண்டும் பணியாவு மின்னிடையா ளஞ்சாமல்
ஆண்டொன்று வோர்நாள்போ லாற்றினள்—யாண்டுமே
சந்தோட மெய்தாத் தவனுமந்தக் கன்னிகைக்கு
மந்திரங்க ளீந்தான் மகிழ்ந்து. 38

வேண்டுங் கடவுள்தான் மேவியுனை யுற்றருளும்
வேண்டும் புதல்வரென மீண்டானே—மீண்டொருநாள்
அம்மனுவி லேயுற்றே யாமத்துப் பானுவினைத்
தம்முனென வந்தான் தனித்து. 39

கண்டஞ் சினளாய்க் கன்னிநான் நீண்டலெனும்
பெண்டைமகிழ் விக்கப் பிறந்தவனை—கண்டனரேல்
கன்னிக் கிழுக்கென்று கங்கைசெலப் பேழையிலே
முன்னி விடுத்தாள் முனைந்து. 40

அன்று திரைக்கரத்தா லாதித்தன் றன்சேயை
நின்றசையத் தாலாட்டி நீள்கங்கை—ஒன்றவே
தத்திப் பலகாதந் தான்கொணர்ந்து சித்தரித்த
அத்திநக ரண்மியநா ளாங்கு. 41

மன்னர்கோன் கண்ணிலிநீர் வந்தாடு மேல்வையினில்
முன்னருறு பேழைதனை முன்னியே—என்வலவ
பேழையெடுப் பாயதனைப் பெற்றுக்கொ ளுள்ளிடத்தே
வாழுமதெற் கென்றானம் மன். 42

கண்டு மகவென்ன கண்ணிலிநீ கொள்கவெனக்
கொண்டுதம் மில்லாளைக் கூய்க்கொடுத்து—விண்டானே
சூதப்பேர் நீக்கவந்த தோன்றலென சூதனவன்
ஓதிப்பேர் கன்னனென்றான் ஓர்ந்து. 43

பன்னாளக் கண்ணிலிதான் பார்புரக்கக் காந்தாரன்
சொன்னான் மணமமைச்சுத் தூதாக—மன்னவர்கோன்
நேர்ந்தானே மன்றலினை நிச்சயித்த நன்னாளில்
வேந்தரெலாம் வந்தார் விரைந்து. 44

வந்த வரசரிலே மத்திரத்தா னும்போச
குந்தியும் தம்பெண்ணை கொள்ளென்றான்—விந்தையெனப்
பாண்டுதனக் கவ்விரண்டு பாவையுடன் மன்றல்வினை
ஆண்டு நடந்த தணிந்து. 45

வந்த வரசர் மகிழ்ந்து விடைபெற்றுத்
தந்நகர்க் குற்றார் தரைமுழுதுங்—கந்தனெனப்
பாண்டு விதுரனொடு பாராண்டா னாண்டு
வேண்டும் விழியிழந்த வேந்து. 46

அந்தநா ளிந்தமனு மன்புடையா ளுங்கலையாய்ப்
பந்தமொடு கூடிப் பயனுகரச்—சிந்தைதனில்
மானென்று வேட்டைக்கா வந்தவந்தப் பாண்டுகணை
எனன்று விட்டான் எடுத்து. 47

பட்டுருவிப் போமுனியும் பாண்டை முனிந்தருளி
இட்டான் கடுஞ்சாபம் என்போலப்—பட்டாய்நீ
மானேக்கி னுரை மருவ வருகணத்தில்
கோனேபோய் விண்ணென்று கூய். 48

சேனை பதிமூன்று மாசிரமஞ் சேர்ந்தவனாய்
மானை ரிருவருடன் மாண்பாகக் கானதனில்
ஊன்சுருக்கி மேலாம் பரம்பொருளை—யுட்கருதி
தான்சுருக்கி னன்பொறியைத் தான். 49

தேர்திருத ராட்டிரனுஞ் செந்திருநேர் பத்தினியும்
பார்புரக்க வில்லையொரு பாலனென—நேர்முகமாய்த்
தங்குலத் தேவான சஞ்சயனைத் தான்வேண்ட
அங்கழைத்தான் வ்யாதனைநே ராய். 50

வேண்டுவர மீந்தருளி விண்மறைந்தா னக்குருவும்
பாண்டுமறிந் தந்தோ பதைத்துருகிப்—பூண்டயங்கி
மின்னருங் குந்தியினை விட்சணித்தா னுங்கவளுஞ்
சொன்னா டனக்கிருந்த சூள். 51

வாடுங் கொடிக்குமழை வாய்த்தென்கோ வூணின்றித்
தேடும் பயன்றவர்க்குச் சேர்ந்ததென்கோ—வோடுதான்
கொண் டேற்பான் மாமணிகைக் கூடியது போலென்கோ
பெண்டாலே பாண்டடைந்த பேறு. 52

அந்தமுனி தந்த அருமைகொளு மந்திரத்தைச்
சிந்தையிலே புன்னித் தியானித்துக்—குந்தியெனுங்
கற்பரசி நற்புதல்வர்க்கா வுரைத்தாள் பாண்டுமனன்
சொற்பழுதா காமல் துணிந்து. 53

அந்தகனூற் காலா லாந்தரும வீமருடன்
இந்திரனு லர்ச்சுனனை யீன்றாளே—குந்தியைப்போல்
மத்திரையுந் தேவ வயித்தியரால் பின்னிரண்டு
புத்திரரை யீன்றாள் புரிந்து. 54

குந்திமுன மீன்றவந்தக் கொள்கைதனைக் கேட்டறிந்து
வெந்துமனங் காந்தாரி மிக்கழுங்கி—உந்தியினைக்
கற்கொண்டு தாக்கக் கருப்பஞ் சிதைந்ததோ
முற்கொண் டிறங்கினதால் முன். 55

மன்னன் கருதுதலு வந்தே வியாதமுனி
உன்னி யருளா லுறவெண்ணிச்—சின்னாளில்
ஆனுக நூறு கடத்தருளி யொன்றினிற்பெண்
டானுக இட்டகன்றான் றான். 56

ஆச்சியம் பெய்த கடங்களைமு னுங்கிருந்து
ஓச்சியே யீமுதல வொண்டாமல்—பேச்சின்றி
காந்தாரி பாந்தளெனக் காத்துறைந்தாள் கண்ணிழுந்த
வேந்தா தரிக்க விழைந்து. 57

தீத்தொழிலே கன்றித் திரிதந் தெருவைபோல்
நோத்தரு புன்புதல்வர் நூற்றொருவர்—மூத்தவிரா
வந்துதய மானார்கள் மன்னனுடன் காந்தாரி
முந்துவகை கொள்ள முனைந்து. 58

சித்திரைபோய் வேளின் விருதே திசைமுழங்க
மத்திரைபோய் அன்னத்தை மன்னவர்க்கு—வைத்துரைக்கப்
பூமா தெனவே புகழ்ந்தழைத்தான் பள்ளிக்கு
நாமோத லாமோ நவில். 59

என்னென்பேன் மாதி னிதட்சுவையா லெஞ்சினுன்
மன்ன னொருகணத்தில் மானவரே—துன்னுவிடம்
ஆரமுதா மந்தோவன் காலத்தின் கோலத்தால்
பேரமுதம் நஞ்சாகும் பேசு. 60

மத்திரையு மோலமிட வந்தாங்கே குந்திநொந்து
புத்திரரை யார்காப்பர் போயினையே—யித்தரையில்
மன்னவோ வென்றுமிக வாய்விட்டழுது நின்று
மின்னே வெனவிழுந்தாள் மேல். 61

ஒற்று லறிந்த உரவிதுரன் முன்னுவார்
எற்று லிறந்தானே வென்றேங்கி—பற்றதனல்
அங்கடைந்து செய்கடன்க ளாற்றப்பின் மத்திரையு
பொங்கி யெரிபுக்காள் புரிந்து. 62

குந்தி யினைத்தடுத்து கொண்டுவந்தார் மக்களொடுந்
தந்தி பெயர்கொண்ட தன்னகரில்—வந்தபினே
எண்ணில்லாத் தேயத் திறைவர் தூயர்நீக்கக்
கண்ணில்லா னுந்தேர்ந்தான் காண். 63

மன்னர்வழித் தோன்றலாய் வந்தோ தரனைவோரும்
கன்னநெடு நூல்பலவுங் கற்றூர்கள்—பின்னவர்தாம்
பல்கலையுந் தேர்ந்துள்ள பாரத்து வாசரிடம்
வில்வினையைத் தேர்ந்தார் மிக. 64

வின்முதலாந் தேர்வினநாள் வேந்திர் வருகவெனுஞ்
சொன்முதலாம் ஓலைதனைத் தூண்டவே—மன்முதலாந்
தேசத்தார் கூடுந் திருநா ளிடமதனில்
நேசத்தார் சிடரெலா நேர்ந்து. 65

ஆசா னிடங்கற்ற அத்திரமும் சத்திரமும்
மாசா ரதித்தேர்வும் மற்போரும்—கூசாதாம்
ஏற்ற மிறக்கங்கள் எய்தல் படைகாப்பும்
போற்றப் புரிந்தாரே போந்து. 66

வின்மையினிற் கன்னன் அருச்சுனனு மிக்கோனுய்
பின்மையினும்பின்னுள்ளார் பின்னரென்றே—மன்னுள்ளார்
ஒப்பிட்டார் தண்டிற்கு வீமனே யுச்சனென
செப்பிட்டார் தேர்ச்சிதனைத் தேர்ந்து. 67

தக்கிணையா வேண்டுகிதி தான்கொணர்ந்து மன்மக்கள்
அக்குருவின் பாதத்தி லாக்கலுமே—நக்கவவர்
பொன்னுடை வேண்டேனுன் போரிற் றுருபதனும்
ஒன்னுனைக் கொண்டடைந்தா லூங்கு. 68

நாஞ்சால வோகைகொள்வேம் நல்லவரே·என்றுரைக்கப்
பாஞ்சாலஞ் சேர்ந்து பறைசாற்றப்—பாஞ்சாலன்
கன்னன் றுரியன் களிட்டர்மேல் போரியற்றத்
தன்னமைச்சை விட்டான் சலித்து. 69

மந்திரிகள் வந்தியற்று மாபோருக் காற்றூராய்
நொந்து புறங்காட்டி நூற்றுவரும்—வந்தாரே
என்று வறிந்து எமனுர்சேய் பூசலுக்குச்
சன்னுகப் பட்டான் தக. 70

முன்னேனை வேண்டி முனைந்தா ரிருவருமவ்
வொன்னுனைக் கட்டி யுறுவமெனச்—சொன்னுராய்த்
தேர்முடுகப் பாஞ்சாலஞ் சேர்ந்தவ் வரசனிடம்
போர்முடுகு மோற்றும் புக. 71

வந்தோ ரிருவரையு மன்வினவத் தன்னமைச்சர்
வந்தோ ரிவரென்று வாயுரைக்கப்—பிந்தாமல்
நாற்படையோ டாங்கு நமே வருதுமென
வேற்படையா னுற்றுன் விரைந்து. 72

வீமனு லச்சேனை நில்லாது விந்திடவும்
காமனு மென்னுங் கடுங்கணையால்—கோமகனும்
அர்ச்சுனனுக் காற்று தகப்பட்டான் கட்டிலம்ம
அர்ச்சுனற்கு முன்னிற்பார் ஆர். 73

கட்டோடு கொண்டுகுரு காலடியிற் ருனிறுத்த
மட்டோடு மோகையுடன் மன்னர்முனம்—இட்டதொரு
தக்கிணையை வாயாரத்தான் புகழ்ந்து பாஞ்சாலன்
உக்கும்வகை சொன்ன னுணர்ந்து. 74

என்னோடு கற்குங்கால் என்னே வகமகிழ்ந்து
தன்னுட்டுச் செங்கோலன் ருனுகில்—நன்னுடு
பாதியுனக் கீவனென்ருய்ப் பாற்பசுவே வேண்டியுற்றேன்
போதியென்ரு யேதிலான் போல். 75

செல்வ:மொடுவறுமை செய்யுமவர் தம்வினையால்
எல்வந்தாற் போமிரவி லென்பார்கள்—வில்வேந்தே
இன்றுனக்கு வாழ்வரசு மீந்தேனுன் நீதிநெறி
என்று நிற்கவின்பா யென. 76

ஏக்க முற்றுப் பாஞ்சாலனிந்தத் துரோணனைப்பின்
போக்குதற்கோ ராண்மகவும் புத்தியுடன்—வீக்குற்ற
வில்லாளற் கீயவெழில் மகவுந் தான்வேட்டு
நல்லார்பா லாய்ந்தா னயந்து. 77

வேள்விக்கு யாச னுபயா சனைவேண்டித்
தோள்வலியோ டாணலியுந் தோன்றவே—வேள்விதனில்
அக்கினியில் மிக்கழகாம் பெண்ணொன்று மம்முறையே
அக்கினியிற் பெற்ருனே யாம். 78

பாஞ்சாலன் சேயிருவர் பாங்காய்த் துரோணரிடம்
தாஞ்சார்ந்து கல்விபல தான்பயின்ருர்—பாஞ்சாலன்
எண்ணம் வளர்ந்தனவா ஈங்கிருப்ப வத்திநகர்
அண்ணன்பால் சொன்ன னறம். 79

வல்லவராய்க் கற்ருய்ந்த மக்களுற மானிலத்தில்
ஒல்லு முடிபுனைத லுத்தமமே—தொல்லுலகின்
எண்ணமென வோதியக்கா லீட்டினுன் மந்திரரைக்
கண்ணிழந்தான் மன்னவைக்குக் காண். 80

அறிவிற் குருவா யரசனே கண்ணு
பிறிவிலுயி ராயவம் பேசில்—செறிகவரி
ஒத்தார் ருலகமெலாம் போற்று முயர்குணத்தார்
ஒத்தா ருலகெனவே யோர். 81

மண்டலத்து மிக்குள்ள வாலறிஞர் யாவருமே
மண்டலமாய்க் கூடுதலு மன்னர்பதி—கண்டினிதா
எண்ணிலா வாண்டாக ஏற்றேயும் மாதரவால்
கண்ணிலா தாண்டிருந்தேன் காண். 82

மெய்த்திருவு மேதினியு மேன்மையுற நற்றரும
புத்திரற்குச் சூட்டநறும் பொன்முடியை—நத்திமிக
எண்ணினேன் யெண்ணமுமே யானறிய நும்முடைய
நண்ணினேன் சொன்மினென்ருனல். 83

மன்னன் பிரிவதனுல் மாழ்கிமன நற்றருமன்
மன்னனென லாலன்ப ராகியே—சொன்னமுடி
சூட்டுதலே நன்றென்று சொல்லியுளத் தோகைமிகப்
பூட்டி நின்ருர் நன்மை புக. 84

சஞ்சய னேயாதி சோதிடத்திற் றக்கோரால்
விஞ்சுபுகழ் நன்னுளில் மேன்முடியைக்—கஞ்சமலர்
மாலையுடன் செங்கோலு வாங்குந் தருமனென
ஓலையொடு தூதுவிட்டார் ஓர்ந்து. 85

ஆய்ந்துமுடி சூட்டுநா ளாங்கடைந்த மக்களுளே
வேந்தர்பெரி தென்பார்கள் வீரரொடு—மாந்தர்பெரி
தென்பார் மகளிர்பெரி தென்பார் புலவர்பெரி
தென்பார் அறிந்தா ரெவர். 86

அத்தி நகரியோ வன்ருே வெனத்திகைத்துத்
தத்த மிடங்காணத் தாகமாய்—உத்தம
பாளையத்தும் பூண்டிநகர்ப் பண்ணையத்தும் போலவே
காளையொத்தார் புக்கார் கவின்று. 87

அப்பொழுது மண்டபத்தே யானபல தீர்த்தமெலாந்
தப்பறவே கொண்டுவந்து தானுட்டி—செப்பரிய
கோமுடியுஞ் சூட்டி கொடுத்தான்செங் கோலையுமப்
பூமுடிய வாண்ட புமான். 88

தன்னுற் பகைவராற் றங்குவிலங்காற் கிளையால்
ஒன்னுத கள்வரா லோங்குபயம்—மன்னுவே
நற்றரும னுட்சி னடத்தினு லென்றுலகம்
பற்றியுளத் தெண்ணப் பரிந்து. 89

தேருமை நன்னூலைச் செங்கோலைத் தான்வேண்டி
போருமை கொண்டானைப் போற்றியே—வேருகத்
தூண்டினுன் மாமன் துரியோ தனன்வந்து
வேண்டினுன் தந்தையின்கால் விழ்ந்து. 90

தருமனர சாட்சிதனைத் தாங்காதப் பொல்லா
திரியோ தனன்சொல்லைத் தேர்ந்து—பிரியாமை
போக்கினுன் செங்கோலைப் புண்ணியத்தா னில்லாத
நோக்கினுன் சொன்னுனே நூல். 91

தாதைவிது ரன்றனையுந் தான்தேற்றக் காசியென
ஓது நகரி லுறையைவர்—நீதியுடன்
சென்ருள்கை நன்ருந் திரத்தா ரிருவோர்க்கும்
பொன்ருள்கை நேராமற் போம். 92

ஒத்தா ரிருவரென வோங்கு மணிமாடம்
நத்தியரக் காலியற்றி னுரங்தோ—வித்தாகும்
நற்றருமன் றன்னேடாங் கைவரையு நன்னுளில்
நற்றருமஞ் சேர்கவென்ரு னுல். 93

காசியே மன்றாக காசினியை யாண்டிருந்தார்
ஆசியே கூறிடவு மான்றோர்கள்—நேசியா
வீமன்பா லம்மனையின் மீளுவழி யைவிதுரன்
தாமன்பால் கூறிவிடுத் தான். 94

ஒன்னார் குறித்தநா ளொன்றின் முனமெரியைத்
தன்னா லெறிந்தனபோ ரான்மூட்டி—முன்னாக
தாயுடனே ஐவர் தமைத்தூக்கி பீமனவன்
பேயுழலுங் கான்புகுந்தான் பின். 95

வைத்துத் துயில்நீங்கா மன்னோடு தாய்தம்பி
துய்க்கு முணவைத் துருவுங்கால்—உய்த்தனனே
தங்கைதனை வல்லரக்கன் சாரு மனிதர்மணம்
எங்கிருந்தென் றாய்ந்துவர வே. 96

கண்டனளே வீமனிறை கண்ணழகுந் தோளழகும்
விண்டனளே காதறனை மெய்யாகப்—பெண்டின்பம்
கொள்ளென் றிரந்தாளை கோமகனு நின்சரிதம்
விள்ளென் றுரைத்துரைக்க மேல். 97

இற்றைநாட் போனானென் ஏற்பின்ன வியைந்தாள்
கொற்றமுறு வாளிடும்பன் கோபமுடன்—மற்றிவளை
நீமடியா தேற்றுமணம் நேர்வாய் எனதுபசி
தாமடிய வந்தாய் தனி. 98

என்றெதிர்க்க வாள்வீமன் ஏற்றவனை நொ[illegible]க
கொன்றவித் துள்ளக் கொதிப்படங்கி—[illegible]றவெல்லை
செங்கோலன் தாய்தம்பி சேர்ந்தவ் வனியோடு
தங்கோல நீக்கினார் [illegible] 99



வீமனையே மாமியிடம் வேண்டி யவளருளால்
காமனையே கூடிக் களித்தாள்போல்—வீமனையே
கூடித் தழுவி குமரனையும் பெற்றெடுத்தாள்
வாடுமிடை யாளவளு மற்று. 100

வேத முனிகூற வேத்திரகீ யம்புகுந்து
வேத முனிவராய் மேவினார்—சாதகமாய்
காயிலைநீ ரூண கறித்தருந்தி யவ்வூரார்
ஏயுமனார் கண்டிருந்தா ரேன். 101

இல்லுக் கொருநாள் இயைந்தமுறை யாகவன்னம்
மல்லுக் கடுத்தபகன் வாய்கொளவே—எல்லில்
கொடுக்கு மகவோடெருதும் கொண்டுறைவா னின்றேல்
மடுக்குமவன் யாவையுமே மன். 102

என்றஞ்சி வாழ்ந்தார்க ளியுமுறை ஐவருமே
ஒன்றி யுறையில்லாட் குறுதலுமே—நன்றுசொல
நன்மகவு மில்லேனங் நாசமுறுவாற் களிக்கும்
கன்ம நிலக்கென்புரிவேன் காண். 103

என்றழுது நிற்கு மேழைக் கிரங்கியம்ம
ஒன்றுமக னுள்ளானுறு துயரம்—இன்றுவிடு
என்றுரைத்து வீமனை முன்னேற்றிச் சகடமதில்
அன்றனுப்பினுள் தாய் அமர்ந்து. 104

பாதிவழி போகுமுனம் பாண்டில்நிறை சோறனைத்தும்
மீதியற வீமன் மிசைந்திருக்கக்—காதுதற்கு
வந்த பகனை மடித்துச் சகடமொடு
வந்தனனூ ரோகைகொள மன். 105

சின்னாளவ் வூர்தனிலே சேய்களொடு தாயிருக்க
மன்னுகச் சென்றவர்கள் மாய்ந்தனரே—என்னுவோ
தீயுற் றழிக்கவென தேம்பி யழுதாற்றி
ஒய்வுற்ற தத்திநக ரூர். 106

கஞ்சனையான் செய்தவொரு நாசமுறு மாயமோ
வஞ்சனையோ ஐவர்நிலை மாரியே—எஞ்சினரே
என்றென்றே தேசத்தார் ஏக்க முறத்துரியன்
நன்றென் றரசாண்டா னுல். 107

பாசத்தாற் கேட்டுவிறற் பாஞ்சால னவ்வுரையை
நேசத்தாற் றுன்பமது நீடிக்க—மாசற்றூர்
பாலணிகி பஞ்சவரின் பான்மைதனை சோதிடமா
நூலணிகி யோர்ந்தா னுனித்து. 108

மன்னர் விதிப்படியே வைத்தாற் சுயவரத்தம்
மன்னர்தயங் காதுறுவர் மற்றென்ன—சொன்னபடி
யுய்த்தான் திருமுகத்தை ஓங்குதிரு நாடனைத்தும்
கொய்த்தாம வல்லிமணங் கொண்டு. 109

செய்தி பறந்துள்ள தேயத்தா ரெல்லோரும்
எய்தினு ரோலைகண்டு ஏமுற்ற—செய்திதான்
வேத்திரகீ யத்துள் விரவவடைந் தாரைவர்
வேத்திரகீ யந்தனையே விட்டு. 110

நன்னிமித்த மாங்காங்கு நாட்ட வியாதமுனி
முன்னிற்க கண்டே முடிதாழ்ந்தார்—வின்னிமித்தம்
வேந்த ரவையத்து மேவிக் குயிலினம்போல்
சார்ந்தவவை யத்திருப்பிர் தான். 111

உங்கட்கே யாகு முளங்கொள்வீ ரென்றைவர்
தங்கட்கே யீந்துவிடை சார்ந்தானுல்—திங்கட்குப்
பூரணமை வந்த பொலிவேபோ லவர்களு
ஆரணங்கள் போலடைந்தா ராங்கு. 112

ஐந்துபத்தோ டாரு யமர்தேய மன்னரிலே
ஐந்துமொய்த்த மாமுடிகா ணுனேங்கி—நைந்துமனம்
நன்மகனை நோக்குதனு நாப்பனெமுந் துரைத்தான்
வின்முகத்து நாண்பூட்டி மேல். 113

மச்சேந் திரந்தன்னை மஞ்சள்நீர் பார்த்தெய்தார்
கச்சார் தனத்தாளைக் கைக்கொள்வர்—எச்சிறப்பும்
கொண்ட சுயவரத்தின் கோளென்ருன் மன்னவர்கள்
கண்டெழுந்தார் வில்லடுத்து காண். 114

மாயனலி யோடிளைய மன்னையுங்கண் காணித்து
நேயநமக் கில்லையதில் நின்மினென—நேயமுடன்
எத்துணையோ மன்னர் எடுத்தார்நா ணேற்ருமல்
பொய்த்துநின்ருர் இன்னல் புக. 115

வாண்மை கொளுந்தூரியன் மன்றில்வில் கையெடுத்து
நாண்சா ணிருக்கவிட்டு நைந்துருண்டான்—ஆண்மைகொளும்
கன்னன் மயிர்க்கிடையே காணவலைத் தெய்வனென
மன்னரிடை யேவிழுந்தான் மன். 116

வந்த வரசரெலா மாட்டாரா யோய்ந்ததற்பின்
இந்தவினை யந்தணர்க்கா மென்றுற்றே—யந்தவில்லை
எய்யப் பனவர்க் கிடம்வேண்டி தானெடுத்தான்
தையலுக்கு மாலையெனத் தான். 117

வில்லெடுத்த வர்ச்சுனனும் வேதியனும் நாண்கொளுத்தி
எல்லடுத்த வக்குறியை யெய்தானே—சொல்லடுத்த
மன்ன ரெலாங்கூசி மந்திரமோ வென்றஞ்சி
தொன்னகருக் கேகிநின்ருர் சூழ்ந்து. 118

மாலையிட்ட பெண்ணோடு வந்துதா புள்ளிருக்க
கோலையிட்டே எய்துகனி கொண்டனென—மாலாகி
ஐவருநீ ருண்கவென அன்பாகத் தாயுரைக்க
ஐவருமொக் கச்சிரித்தா ராங்கு. 119

என்னேயான் சொன்னபடி என்றுதிகைத் தாடருமன்
ஆன்ருயுன் சொல்வேத மாமென்ருன்—பின்னுடிப்
பாஞ்சாலன் வந்தந்தப் பஞ்சவரைக் கண்டேற்ருன்
நேஞ்சால வூர்புணைந்து நின்று. 120

இன்று வரையிருவ ரேற்றதிலை யோர்பெண்ணை
நன்றுகொலோ ஐவர்பெண்ணை நண்ணலென—ஒன்றியே
எண்ணினுன் வேதவி யாதனையப் பாஞ்சாலன்
நண்ணினு னுங்கவன்முன் நன்கு. 121

வந்து திரௌபதையை மன்னரைவர் நாண்பூட்டல்
முந்தைவர லாறதனுல் முற்றுமென—நிந்தையற
நன்ருு யவள்சரித நாடறிய ஐம்பொறியை
வென்ருன் விரித்தான் விதந்து. 122

பஞ்சவர்க்கு நன்னுளிற் பாஞ்சால னெப்பிமனம்
கொஞ்சுகிளி யாளைக் கொடுத்தானே—அஞ்சலறும்
பஞ்சவரி னுற்றல் பகர வறிந்தேங்கி
அஞ்சிநின்ருர் நூற்றுவரு மாங்கு. 123

அத்திநகர் தன்விழுள ஆன்றோ ரமைச்சரெலாங்
கொத்தையுட ஞராய்ந்து கோக்குமரர்—நத்தியவர்
காண்டவபி ரத்தமெனுங் காட்டுடனே பூப்பாதி
பாண்டவர்க்கு யீந்துவிட்டார் பாங்கு. 124

கண்ணன்வரக் கண்டு களித்து வணங்கிநின்ருர்
எண்ணரிய நன்னகர மேற்படுத்த—விண்ணகர
சிற்பிதனைச் கூவித் திறம்பெறவோர் நன்னகரம்
பொற்பமைய வாற்றுகெனப் போந்து. 125

மாடங்கள் மாளிகைகள் மன்னரவை நாற்படையின்
கூடங்கள் மந்திரிகள் கூடுமிடங்—ஆடரங்கு
பாடு மிடம்புலவர் பாவலர்கள் தங்குமிடம்
நாடுமிறை கோயில்முதல் நன்கு. 126

இன்னும் பலபலவும் எய்து மரண்மனையும்
மன்னர் மறையவர் வைசியர்கள்—பின்னருளார்
நற்றெருவும் பொய்கைகளும் நல்லவறச் சாலைகளும்
கற்றுத் துறந்தமுனி கள். 127

தங்குந் தளியும் சாமிதிருக் கோயில்களும்
மங்கு லுறங்கும் மதிலகமும்—தங்கி
மிளிரப் புரிந்தான் விண்ணகருந் தோற்க
ஒளிரிந்திரப் பிரத்த லூர். 128

ஊரிந் திரமா யொளிர்தலா லிந்நகரம்
பேரிந் திரபிரத்தப் பேருறி இ—சீர்பெற்று
வைகுந் திறமதனல் வானவரு வந்துநனி
வைகவுளங் கொண்டாரம் மா. 129

மாபதியே வந்தந்த மானகரைத் தான்இிறக்கக்
கோபதியு மாட்சிதனைக் கொண்டானம்—மாபதிக்கு
வந்தபெரி யோர்தம்மில் மாதவத்து நாரதருந்
தந்தாரே நீதிநெறி தான். 130

ஆண்டுக் கொருவரா யைவரும்பாஞ் சாலிதனை
ஆண்டுவரு விரொருவ ராளுங்கால்—ஆண்டமையின்
தண்டங் கமண்டலங்க டாம்பிடித்துக் காசினியைக்
கண்டிங் கடைதல் கடன். 131

என்ன வுரைத்ததனை யேற்றுருநாள் தன்மனத்தப்
பன்னி யொடுநிலவும் பள்ளியிலே—வின்முதலாம்
ஆயுதமெ லாமெடுக்க அர்ச்சுனன்ரு னுற்றதனுல்
வாயுறுத்திச் சொன்ன வகை. 132

கங்கைமுத லிராடி காசிகச்சி தில்லைமுதல்
எங்கும் படர்ந்தே யிறைவனையே—பொங்குமன்பின்
தேவாரஞ் சாத்தி திருவா சகமுரைத்து
நாவாரப் போற்றி நனி. 133

கொள்ளுங்கா வேறி குதித்துவருங் காவிரியின்
தெள்ளுநீ ராடித் திருவருட—உள்ளூரங்கும்
மாதவனைக் கண்டு மகிழ்ந்துதிரு வாய்மொழியை
ஓதியுளங் கொண்டுமின்று னேர்ந்து. 134

நீராடு லூகிதனை நேசித் தரவானை
போராடப் பெற்றுப் புரிந்தபினர்—தோரோடும்
மாமதுரைக் கோவின் மகளைமணந் தோர்மகவை
பூமணக்கப் பெற்றப் புறம். 135

மன்னைக் கடல்கடந்து மால்துவரை தானணுகி
வன்னக் கடனிறத்தான் வந்திக்க—முன்னுசி
கூறிநீ ராடலுறுங் கொள்கை யறிவித்நான்
கூறினன் பின்னுளைக் கூய். 136

தங்கா யுனது தவந்தா னுருக்கொண்டே
இங்கான வாரொக்கு மிம்முனிக்கு—நங்காய்நீ
குற்றேவல் தானுற்றிக் கொள்வாய் பயனெனவே
நற்றே வெனத்தொழுதாள் நன்கு. 137

இந்திரற்கே பூசை இயற்றுநா ளின்றென்று
தந்திரமாய் அப்பதிக்குத் தந்தமரை—முந்தப்
பலராம ரோடு பரிவாரம் சூழ
அலரோ னுதயமுற்று னங்கு. 138

கன்னி பணிசெய்யுங் காலம் முனிவடிவங்
தன்னிலுறும் விற்றழும்பாற் றுனயிர்த்து—அன்னவனை
வந்தனைசெய் தேத்திப்பின் மாதவனே நின்றனையே
தந்தநகர் கூறென்றுள் தான். 139

இந்திரபி ரத்தமுளேன் யீராறு திங்களிலே
மந்தா கினிமுதலா மாதீர்த்தம்—நிந்தையற
ஆடிவந்தேன் பாண்டவரி லர்ச்சுனன் நானென்னலுநீர்
வர்டிவடித் தாள்விழியின் மன். 140

உள்ளத்து நீங்கா வுறுகா தலர்நேரின்
விள்ளுவரோ கண்ணனெடு விண்பதியை—உள்ளினுர்
ஆங்குற்றுர் வந்தனை செய்தக்கினியின் முன்பாக
மாங்கிலியம் சூட்டினுன் மன். 141

தம்பதிகட் காசிமொழி தந்துசென்றுன் இந்திரன்விண்
வம்பணிந்த கூந்தன்முடி மானவளை—நம்பியுடன்
செல்லென் றலாயுதன்பாற் சேர்ந்துரைத்தா னிச்செய்தி
மல்லொன் றுதோளானம் மால். 142

தன்றேர் சுபத்திரையா டானேட்ட வர்ச்சுனனும்
அன்றேந் திரபிரத்த மானுனே—கன்றுலே
காயெறிந்தா னுள்ளிட்ட காவலர்கள் தாங்களித்துப்
போயிருந்தார் வென்றி புக. 143

பின்னு ளபிமனனைப் பெற்றுள் சுபத்திரையும்
என்னு வறிந்தைவர் இன்புற்றார்—உன்னுப்
பலராமர் தம்பியொடு பாங்காச்சீர் கொண்டு
நலராய் அடைந்தார் நனி. 144

சில்லென்று பூத்துச் செடிகளெல் லாந்தழைய
வில்லென்று கையேந்தி மென்கரும்பை—அல்லென்ற
ஆனை யொடுதென்ற லாயங் கிளிநான்கு
சேனையொடு வந்தான் வேள்தேர்ந்து. 145

எய்யானம் பென்றங்கே யீண்டுவபோல் வண்டொலிக்கு
முய்யானங் கண்ணனோ டுற்றானே—நெய்யானும்
பாலானு மூட்டுவபோல் பக்கத்தே புட்கூவும்
ஆலானங் கேட்டிருந்தா ரால். 146

சோலை யழகுண்டு துய்த்தான் னுட்களிலே
மாலை யடைந்தானோர் மாதவனு—வேலையினை
அன்னேரும் பூசிக்க ஆங்கவனூண் யாசிக்க
அன்னேருஞ் சம்மதித்தா ரால். 147

சந்தோட மீக்கொள்ளத் தானுனை னக்கினியு
வந்தோன் செயலறிந்த மன்னரிலே—சொந்தமென
காண்டா வனந்திக் கடவுட்குத் தானிந்தான்
பாண்டவரிற் பார்த்தனே பார். 148

அக்கா டடைந்துநின் றங்கி யுணப்புகைதான்
திக்கெல்லா பௌமெனச் சேர்தலுமே—மிக்ககடைத்
தீயெனவே யோங்கித் திகழ வமரேசன்
கூயனுகு மேகங் குறித்து. 149

நீயிர்போய் காண்டா வனமதனை நீருக்கும்
தீயணைப்பீரென்று நனி செப்பலுமே—போயுகுத்துக்
கல்லென்று பெய்திடலும் காண்டீபன் காடனைத்தும்
வில்லம்பால் வேய்ந்தான் மிக. 150

இந்திரனுஞ் சேனையுட னின்டினுன் போரிற்கு
வுந்தினன் பாணத்தை யோர்கோடி—நந்துறவே
காவேய்ந்த பாணத்தான் அர்ச்சுனன்பாற் கற்றூலும்
நாவேய்ந்தார்க் காமோ நவில். 151

ஓடினார் பின்காட்டியும் பரெலாம் நொந்துநின்று
ஆடிக்காற் றாசா யலைந்தார்கள்—நாடிமிகத்
தங்குருவே சாந்திசெய சாத்திரங்க ளாராய்ந்து
தங்கினர்நற் றேவநகர் தாம். 152

தீயுற்ற கானகத்தில் சிக்குற்ற தக்ககனும்
வாயுற்ற குட்டியுடன் வானேக—பாயம்பால்
மாய்ந்திட்டான் வாயிலுள வாலிற்ற குட்டியினை
ஆய்ந்தாற்றி னார்தேவ ராங்கு. 153

வான்முறிந்த வச்சுவ சேனன்றானு மாறுதலாய்
மேன்மூடிந்த காயமொடு மேவியே—வான்முடிகொள்
ஒன்னலர்க் கின்னார்தா மொன்னா ரெனவுணர்ந்து
கன்னனுக்கம் பானான் கறுத்து. 154

ஆங்கே மயனு மபயமென வர்ச்சுனற்குத்
தீங்கொழித்து வந்துவகைத் திக்கடவுள்—பாங்குடனே
ஓயாத தூணி ஒடியாவில் நற்பரிதேர்
வாயாரம் போடளித்தான் மன். 155

மண்ணுலக மன்னவர்கள் வானவர்மேற் போரியற்றி
வெண்ணிடச்செய் தற்காங்கு வெள்கியே—எண்ணியெண்ணி
நற்கரும மாராய்ந்து ராசசூ யம்புரிந்தோன்
நிற்குமொரு வற்கடிமை நேர்ந்து. 156

எவ்வுலகுஞ் செல்லு மியற்கை முனிவரனைச்
செவ்விதுனி வந்தவர்க்குச் செப்பியே—அவ்வியமாய்
பாண்டுவின்பாற் சென்றுரைத்துப் பஞ்சவர்களம்மகந்தான்
வேண்டினான் செய்வான் விரைந்து. 157

ஆதிபர்வம் முற்றிற்று.

---

## சபாபர்வம்

சீருஞ் சிறப்புடனே வாணாளுஞ் சீர்த்தியெலாம்
நேரும் பிறவெல்லாம் நிச்சயமே—பேருஞ்சீர்
கண்ணா! கமலாவி நாயகனே! என்றென்று
எண்ணுமகம் உற்றார்க்கே யின்று. 158

ஐயா னனாக ஐவருமங் காண்டிருந்தார்
மைவா கனன்றாதா வந்தானக்—கையாழோன்
வந்தித்தார்க் காசி மகிழ்வோடு தந்தருளி
சந்தித்தார் நுந்தையென்றான் தான். 159

நன்மக்களைத் தேற்றி யிராசசூ யம்நடத்தின்
சென்மக்களை யாறுஞ் சேமமே—என்மக்கள்
தீரரே செய்யுந் திரனுடைய ராமிவரின்
வீரரே யில்லையென்றான் வேந்து. 160

கூறு முனிவர்தமைக் கூடுமோ சொல்லென்றார்
வேறு புகல்வானேன் வீரர்காள்—நேருமே
செய்வி ரெனப்புகன்று சென்றாரே நாரதரு
மைவிரு மாய்ந்தழைத்தா ரால். 161

கண்ணன் வரத்தழுவிக் காட்டினா ரெண்ணத்தை
கண்ண னதுவே கடனென்று—மண்ணுலகி
லாற்றாரில் நாமே வுளாற்றா தொழிவோமேல்
மற்றார்செய் வாரென்றான் மால். 162

மயனைவா வென்றதற்கு மண்டபங்கா ணென்றா
னயனா லுலகமமைப் பாற்கு—வியப்பாமோ!
ஆங்கவனும் ராசசூ யத்தினுக் கேற்றபடி
ஓங்கிவளர் மேடைகண்டா னோர்ந்து. 163

மன்னெல்லாந் தங்க மகமியற்ற தானமிட
பொன்னெல்லாங் கொண்டொளிரப் பூட்டினனோ—வென்
செய்தா னிலையென்று சிந்தித்துச் சிற்பரொன்றும் [னெல்லாஞ்
எய்தா வியப்படைந்தார் ஏய்ந்து. 164

மேலுள்ள பச்சையொளி வெய்யோனாற் கீழ்த்தளத்து
மேலுள்ள கற்பளிங்கி மேற்படர—பாலெல்லாம்
நீராகத் தோற்றமிட நீங்காது நீர்நிலைகள்
பாராகத் தோற்றவிட்டான் பார்த்து. 165

மண்டபம் வந்தொன்றிற் றாறா யிரமாகக்
கண்டும் புகுந்தவழி காணாதும—கொண்டுள்ள
மேன்மாடம் பாதளமாய் மேவும் பலசூட்சி
நான்பாட லாமோ நவில். 166

செய்தம் மயன்வந்து திவினையே னத்தியி
லுய்திடற்கீ தம்மம வொப்பாமோ—செய்தற்கு
வேண்டும்போ தெல்லாம் விரும்பியென் பாற்கொடுக்க
வேண்டுமெனச் சென்றானல் விண். 167

மண்ணுலகை நான்கா வகுத்துப் படைகளையு
மெண்ணமிட் டீரிருவ ரேகன்றான்—திண்ணியமால்
சென்றார் திசையனைத்தும் தேர்பே ரிகைமுழக்கி
வென்றார வர்தாம் விரைந்து. 168

ஓரொருவ ரிந்திட்ட கப்பந்தா னோதிடவோ
ஈரிருவ ரீட்டுநிதி எண்ணவோ—போரவர்கள்
செய்த வெலாமீண்டுச் செப்பவோ முன்னவர்தாம்
செய்தவமே யாமென்று தேறு. 169

சஞ்சயனே யாதி முனிவோருஞ் சாத்திரரும்
விஞ்ச மறையொலிகள் மேலோங்க—வெஞ்சாது
கங்கா புதல்வரொடு காவலரில் மிக்கோருந்
தங்காது வந்தாரே தான். 170

யாகமிது காண்ட லருமை யருமையென
யாக மியற்றுகிற வந்தணர்தா—மேகமெலாம்
கார்காலங் கூடுவபோல் காண்டற் கியலாவாச்
சார்ந்தார்கள் மென்மேலுந் தான். 171

கண்ணில்லார் காலில்லார் காசம் பெருநோயாம்
புண்ணுள்ளார் தம்மோடு புந்தியில்லார்—மண்ணுள்ளார்
வாராதா ரிச்சிலரே வந்தவரை யாராய்ந்து
யாரோத வல்லா ரவண். 172

காப்பணிந்து மோதிரமுங் கையிலணிந் ததற்பின்
நாப்ப ணிருக்கவே நற்றருமன்—பூப்புரப்போர்
சேவித்த பின்னிற்கச் செய்யத் துவக்கினர்
கோவித்தா மம்மகத்தைக் கூர்ந்து. 173

கோடிக் கணக்காகக் கூடியவர் தாமிருந்து
வேடிக்கைப் பார்த்து வியந்திருப்பச்—நாடி
மயனர் வகுத்தபெரும் மாளிகைநல் லோரை
செயலானு ரம்மகத்தைத் தேர்ந்து. 174

வேதிகைமேற் கும்பம் விதானத்தின் கீழிருத்தி
வேதம் வகுத்த வியாதமுனி—ஆதியா
தத்துவத்தில் மிக்கோருஞ் சத்த இருடியரும்
வித்துவத்தா லோதினரே விண்டு. 175

பக்கமொரு மூன்றுபலர் பண்பாக வோதினரே
முக்கணன்றன் நாமலட்சம் மூவிரண்டு—விக்கினங்க
ளின்றிகிரி யாமந்திர லோபங்க ளெல்லாமும்
வென்றிவரச் செய்தார் மிடைந்து. 176

நூறு யிரந்தடவை யாகுதியாம் நோன்பியற்றி
ஓரா யிரம்பேரு மொன்றியே—நேராகப்
பூரணமாச் செய்தாங்குப் போற்றிப் புகழ்ந்தார்கள்
காரணமா ஈசனையே காண். 177.

அன்ன மவரவற் கானபடி யூட்டினதை
என்ன அருமையென வேத்துவேன்—மன்னவர்பின்
வந்த பரிவாரம் வாழ்த்த மகிழ்வித்தார்
கந்தமுடை யோடளித்துக் காண். 178

வந்த மகுடமுடி மன்னர் குறுநிலத்தோர்
தந்த விறைநிதியைத் தானேற்று—னந்துரியன்
சந்தன மேலமுடன் கற்பூரஞ் சாதிக்காய்
தந்தார் மலையலரையர் தாம். 179

ஆனை பரியாமா வாடிவற்றின் ரோமத்தும்
ஏனை யுரியாலு மெய்துமுடை—மானினைமுன்
ஒத்த விலங்கும் உயர்பறவைச் சாதிகளும்
அத்தமதி லீந்தாரேயாம். 180

பொன்னு மணிமுத்து மாதனமும் பூணினங்கள்
இன்னும் பலப்பலவு மீந்தார்கள்—கன்னன்றான்
கையோயத் தானமிட்டான் கண்ணேய்ந்தார் மன்னவர்கள்
நெய்யியும் யாகத்தே நேர்ந்து. 181

அத்தருமன் வந்த அரசர் குமராந்தம்மில்
உத்தமரில் முன்பூசைக் கோர்ந்துரைக்க—நத்தியே
வேதம் வகுத்தோனை வேண்டினன் அன்னவனும்
மாதவற்கே செய்யென்றான் மன். 182

என்றப் பொழுதெழுந்தா விருகுழந்தைப், பேருள்ளான்
நன்று மெனக்கன்றி னைகைத்தான்—வென்றிகொளும்
இச்சபையி லென்றே யாதவனைத் தேர்ந்தெடுத்தான்
மச்சகந்தி யின்ற மகன். 183

வீரம் குலம் வன்மை மன்னரிலே மிக்கோராய்
வார மிலாதுரைக்க வல்லிரேல்—சாரங்காண் !
பாடியிலே மத்தடிகொள் பையலையே யிங்கிவர்தாம்
தேடி யெடுத்ததென்னே தேர்ந்து, 184

வசையே புனைவானை வாவென்றான் போர்க்கு
நசையா லிருவருமே நண்ணி—விசையாலாம்
விஞ்சுபல யுத்தந்தான் மேவினபின் சக்கரத்தான்
துஞ்சவழித் தானவனைச் சூழ்ந்து. 185

வந்த மறையோரு மன்னவருஞ் சேமமுடன்
தந்த மிருப்பிடமே தாஞ்சேர்ந்தார்—விந்தமதில்
இட்ட விளக்கெனவே யேய்ந்தா ரிவர்பிறர்க்கேல்
கட்டமெனப் பேசிக் களித்து. 186

சாந்தம் பொறுமையொடு சத்தியமும் கண்ணுகை
வேர்ந்தம்ம வண்டா னுதிட்டிரனே—மாந்தர்கடாஞ்
செய்தவமே யென்ன செழித்திருந்த தன்னுடு
செய்தவந்தான் என்னென்பேன் தேர்ந்து. 187

பூதமைந்தாய் சோமரவி பூமானுய் வேதந்தான்
ஓதும் பொருளனைத்து முண்டாக்கி—மாதவர்கள்
போற்றப் புரந்தழிக்கும் பொன்னிமண வாளனே நீ
ஏற்றப் புரந்தருளு மென்னு. 188

அன்றந்த யாகத் தரச ரிறையாக
நின்றளித்த வெல்லா நினைந்தேங்கி—கன்றிமனத்
தைவரையும் வெல்லும் அருஞ்சூழ்ச்சிக் காங்கமைத்தான்,
கைதவனும் மாமனையே காண். 189

வந்தா னதற்கென்ன வல்லால்நீ வேண்டுவன
தந்திடுவே னையந்தான் சாராதே—முந்தரையர்
வந்திடற் கேற்பவே மண்டபம் சிற்பிதனல்
தந்திடற் கெண்ணுவையே தான். 190

சிற்பரேவா மீண்டத் திருமுகத்தைச் சேர்ப்பித்தான்
பற்பலராய்க் கற்றேரும் பாங்கடைந்தார்—விற்பனமாய்
நன்மாடஞ் செய்கவென நாட்டினு னன்னவரும்
சொன்மாடஞ் செய்தமைத்தார் சூழ்ந்து. 191

மேன்மாட மஞ்சிறகால் மேலே பறக்கவுயர்
வோன்மாடஞ் சக்கரத்தைக் கொண்டோட—கான்பாடும்
தத்தை மயிலாடுந் தத்துவங்க டாமமைத்து
வித்தையினல் செய்தார் விரைந்து. 192

வல்லால் பகைவெல்லு மார்க்கத்தைக் கண்ணிரண்டு
மில்லார்க் கெடுத்தோதி யீண்டுவர—நல்லார்க்கு
ஓலை விடுத்தானே வுற்றதமர் தந்தலையின்
ஓலை கிழித்தெறிவா னூங்கு. 193

காந்தாரி நாயகன்றன் கையுற்ற வேடெடுத்து
வேந்தாம் விதுரனது மென்சுருளும்—ஏந்தியவ்
வொற்றர் வனம்யாறும் ஓங்கலுமே தாண்டியுற்றார்
நற்றருமன் வாழ்நகரி னன்கு. 194

தூதிற்றார் நுந்தந்தை சொல்லோ டெனக்கேட்டத்
தூதுவர்வந் தேத்துதலும் தூமனத்தால்—தீதிலரோ
தந்தை திருத்தாதை தம்பினென வாமென்றார்
தந்தைசுருள் வாங்கினான் றான். 195

வந்தித்தே யவ்வோலை வாசித்துப் பின்றந்தை
செந்துருக்கந் தேர்ந்து திகைத்தானே—முந்தைநாள்
தந்தைமொழிக் காகவனம் சார்ந்தானி ராகவனும்
தந்தைமொழிக் கேகல்கடன் றான். 196

தம்பியர்க ளெல்லோருந் தான்வருந்த வவ்வோலைத்
துன்புரைகண் டேகத் துணிந்தானே—யம்புலியா
ளிக்குலத்தோ ரின்றுவரை யேற்றார் பிதுர்வாக்கை
அக்குலமென் றூற்கெடலா மா. 197

தீதே வருக செயம்வருக நீதிவழி
மீதேக வேண்டுநா மென்றவன்றான்—கோதேக
நன்றே புரிதரு மனற்பொழுதி லற்புமிகச்
சென்றான் படைசூழத் தேர்ந்து. 198

ஆங்கடைந்து தாதை யடிபோற்றி விற்குரவர்
பாங்கடைந்து பாதம் பரவியே—தீங்கல
வந்தித்துச் செய்தமணி மாடத்தைக் கண்ணுற்றான்
சந்தித்து யாவரையுந் தான். 199

உண்டு களித்தே வுறங்கி யெழுந்ததற்பின்
கண்டு சகுனிசொன்னான் காயாட—பண்டுசிலர்
கட்டமெலாந் தான்கூறி கள்ளிதற்கு நன்றென்றான்
சிட்டர் புகழ்தருமன் றேர்ந்து. 200

மன்னற் பதிலோப மானுனென் றேநகைத்து
இன்ன விளையாட்டி லெத்துணைபோ—முன்னதுதா
னுதரித்து வைத்தானு மானைவிளாங் கனிபோ
லாதரித்த லேகுமென்றா னுங்கு. 201

வாதாடல் செய்கின்ற மாமனை யச்சபையில்
சூதாடல் குற்றமெனச் சொல்வதற்கு—ஏதாட்கள்
காலத்தா லத்தருமன் காயாட வொப்பினனால்
காலத்தை வெல்வதெவர் காண். 202

ஆட்டந் தனைக்கூற லாமே எனதுமனம்
வாட்டமுறும் சொல்ல வருந்துகிறேன்—ஆட்டந்தான்
திட்டமவ ரிட்டபடித் திச்சகுனி வென்றிடவும்
ஓட்டமிட்டா னெவ்வொன்று யோர். 203

நாடு நகரமுட னுற்றுனை யாளடிமை
தேடுநிதி யாவுந் திர்ந்தபினே—கூடியுள
தம்பியரைத் தோற்றுத் தாரமுந் தானிழந்தான்
முன்பிதனை யெண்ணவரு மோ. 204

கன்னன் றுரியன் களிட்டார் களிப்படைந்தார்
மன்னர் பெரியோர் மனமாய்ந்தார்—சின்னவராந்
தந்தை வருத்தமிகத் தாழாது நீர்வடித்தார்
குந்திசுதர் சிந்தையென்னுங் கூறு. 205

ஐவ ரடிமையெனு மானந்த மேலிட்டால்
செய்வதுணை ராதுரிய தியவனு—மைவளருங்
கண்ணனைப் பாஞ்சாலன் கன்னி தனைக்கொணர
எண்ணிவிட்டான் தம்பிதனை ஏய்ந்து. 206

காந்தாரி யோடிருந்த காவலனுர் தேவியினை
போந்தா ளிழுத்தவைக்குப் போகுங்கால்—காந்தாரி
அச்சோ வெனவலரு மாரணங்கை மீட்காது
மச்சான்போ வென்றுள் மகிழ்ந்து. 204

கன்னன் னகைந்தான் கனன்று துரியோதனன்றுன்
இன்னவட்கு நற்பணிக ளேனிருக்கச்—சின்னவனே
மேலாடை தானுரிந்து மென்றுடையி லாக்கென்றுன்
ஆலமென்னு துன்னு மவன். 205

இந்த மொழிகேட்ட வேந்திழையாம் பாஞ்சாலி
தந்தம் விறலடங்கித் தானிருக்குங்—குந்திசுதர்
வன்மை தெரிந்தந்த மாசபையின் வாழ்பெரிய
மன்னவரைக் கேட்டாள் மதித்து. 206

மன்ற மிதுவானல் மன்னவரேல் என்குறையை
இன்று தெரிந்துரைக்க வேத்துகிறேன்—வென்றவகை
நான்முன்னே நாயரோ நாயகியை ஓட்டமிடல்
கோன்முன்னே வுண்டா மிக்கோள். 207

பஞ்சவரை யீண்டழைத்துப் பாடழிந்த சூதாலே
வஞ்சக மாய்மண்ணை வெளவுதற்கு—நெஞ்சமதில்
நச்சியுற்ற வெற்றியது நல்லவெற்றி யாமோதான்
எச்சமறச் சொல்வி ரென. 208

சோதி வடிவாள் துரோபதையா டான்கேட்க
நீதியுரைக்க நினையாது—ஊவோதியவர்
மெய்யாகச் சித்திரம்போல் விள்ளா திருந்தாரே
ஐயோ கொடுமையிகி தால். 209

மூத்தோ னுரைப்படியே மூடத்துச் சாதனனும்
ஈத்தானே மீத்துகிலை யேந்திழையு—மாத்துவரை
வாசாகா வென்றேத்த வண்ணம் பலப்பலவாம்
தூசாக வாக்கினான் சூழ்ந்து. 210

கைசோர்ந்தவ் வீணன் களைப்பேறித் தான்வீழ்ந்தான்
மெய்சோர்ந்து நின்றாளை மேலோர்கள்—கைசேர்ந்து
வந்தித்துப் பூவுலக மாதாவே நீயென்று
சிந்தித்து ரைத்தார் சிறந்து. 211

தானற்று மேலாகுந் தத்துவனை யுட்கருதி
மோனத்திருந்த முழுமணியை—ஞானத்தின்
வித்தாய் விளங்கலுறும் வீராங் கனை தன்னை
எத்தகைய ளென்னா ரிசைந்து. 212

துச்சாதனன் றுரியன் சோரிதமைச் சோர்குழலில்
வைச்சலால் யான்முடியேன் மாசபையீர்—இச்சாபம்
நீங்காது நிச்சயமே நிச்சயமே யென்றுரைத்தாள்
நீங்கா விழியருவி நேர்ந்து. 213

நூற்று வரைக்கதையால் நூறிக் குருதியினை
ஏற்றபி னன்றி எடுத்துண்ணேன்—ஆற்றும்வரை
கொல்கதையா லெற்றிநீர் கொள்வல் எனவீமன்
நல்விரதங் கொண்டான் நனி. 214

காளை யர்ச்சுனனுங் காண்டீபன் கர்னனையான்
ஆளியெனக் கொல்வனென வாங்கரைந்தான்—மீளி
நகுலன் சவுபலனை நான்கொல்வே னென்றான்
சகுனியைக் கொல்வேன்யான் றனித்து. 215

என்று சகதேவ னெடுத்துரைத்தா னிவ்வாறு
வென்றியுறு பாண்டவர்கள் வீறுரைப்ப—கன்றியுளம்
வெம்பியந்தக் கண்ணிழந்த வேந்தன்முத லானவர்கள்
பம்புநிறை விடுமனைப் பார்த்து. 216

பாண்டவர்க ளாறும்வகை பன்னுதிநீ காட்டகத்தில்
ஆண்டுபனி ரண்டமைந்தஞ் ஞாதமாய்—ஆண்டொன்று
தான்கழித்து நாடடைந்து தக்கவகை யாள்விர்புகழ்
வான் கிழித்துச் செல்லும் வகை. 217

என்னவந்த வீடுமனும் இந்தநாட் பாண்டவர்க்கு
நன்னலங் கொடாது மன்னுநாளாகும்—அன்னதனால்
பன்னிரண்டு வத்சரங்கள் பாரகன்று கான்புகுந்தும்
மன்னுமொரு வத்சரந்தான் மன். 218

அஞ்ஞாத மாயுறைந்து மாள்வர்பின் னாடெனவே
சுஞ்ஞாய மென்றுரைத்தார் தொக்கிருந்தோர்—கைஞ்
வல்லடிமை தீர்த்து வனங்காண்போ மாடென்றாள் [ஞீட்டி
சொல்லருந்தி வந்த சுடர். 219

ஆடப் பணயமுனக் காரளிப்பார் சொல்லென்றான்
கூடப் பணயமறங் கொள்ளென்றுங்—காடிடவே
அக்கினியா ளோடைவர் மீண்டவுடன் அச்சகுனி
உக்கிரின்றான் செய்வறியா தோய்ந்து. 219

வாழ்த்தப் பெரியோர் வனஞ்சென்றார் பாண்டவர்கள்
பாழ்த்தப் பிறவிப் பயனிதாம்—ஊழ்த்த
பாவஞ் செறிந்தவிந்த பாரதனை யாண்டிருந்தான்
கோவத் துரியன் குறித்து. 220

முற்றிற்று.

---

## ஆரண்ய பர்வம்.

மூலமே யாதி முதல்வா வெனவழைத்த
காலுவாய் காத்தசீ நாயகனே—சாலவே
எக்கணமுந் தோன்றி இடர்தீர்த் தடியரையாள்
சக்கரனை யெண்ணு மனம்தான். 221

மன்ன வரிற்சிலரு மாமறையோ ருந்தொடர
மன்னரறு காதவழி வந்துவந்து—பின்னரங்கே
தங்கினர் தாமே தவச்சாலை யுண்டுபண்ணி
பொங்கினர் பூசித்தார் போய். 222

நான்காய் மறைவகுத்த நாயகனார் வந்தருள
பாங்கா யெழுந்தவரின் பாதத்தை—நீங்காத
புந்தியா லவர்களும போற்ற வவர்க்குமறை
தந்தாசி கூறினர் தான். 223

சூதாலே கானேகுந் தொல்லோர் கதைபலவு
மோதா மனந்தேற்றி வும்பிதான்—நாதாவாம்
பாசுபதி யையோர்ந்து பன்னாட் டவமிருக்கின்
பாசு பதம்பெறலாம் பார். 224

என்றவுரை தான்கேட்டு யாவர்களு மின்புற்றுக்
குன்றைவிலான் பாலடைந்து கோடற்குச்—சென்றணைய
தந்தார் விடைபெற்றுத் தானேகி யமமலையை
முந்தார்வ மோடேறி முன். 225

சிந்தை யடக்கிச் சிவத்தையே யுள்ளிருத்தி
ஐந்தடக்கி மோனமு யாங்கியற்ற—தந்தியொடு
மாவலறச் சற்று மதியான்முன் னக்காவை
தேவலரத் தீயூட்டுஞ் சேய். 226

ஒன்றோ விரண்டோநா ளாண்டுபல வுண்சருகு
தின்றருந்திக் கானிரைத் திண்ணமுடன்—வென்றமனக்
கானை கருத்தறிய காவிருக்குங் காவலன்றான்
வேலைக்கு போதும் விரைந்து. 227

முந்தை யுகங்களிலே நோற்ருர் முனிவர்சிலர்
இந்தக் கடுந்தவத்தை யான்காணேன்—எந்தவரம்
வேண்டியோ செய்வான் விசய னதுதவீர்க்க
வேண்டியன செய்யென்ருன் வேள். 228

தேவ வரம்பையுடன் சென்றங்கே தீங்கமையோன்
ஏவுதலும் பூங்கணைக ளெய்திலவே—மாதவத்தோ
னென்ருர் திகைத்தங்கே ஏதுவின்றித் தாந்திரும்ப
வென்ருன் தவன்சென்ருன் வேள். 229

மீண்டார் சொலவிருத்த வேடங்கொண் டிந்திரனுங்
காண்டா வனமெரித்த காளையிட—மீண்டியே
என்னேக்க மென்ருனே யேத்திச் சிவங்காண்குந்
தன்னேக்கஞ் சொன்னனே தான். 230

ஈண்டு வருந்திமிக வெண்ணிறந்த காலங்கள்
பூண்டுதவங் காணுது போனுரே—ஆண்டவரில்
ஒன்ருநீ யென்ருேத வூணின்றி யித்தேகஞ்
சென்ருலுங் காண்பனென்ருன் சேய். 231

இந்திரன்மெய் யாகஇலங்கி விரைந் தீசுரனுர்
வந்துனக்கு வேண்டும் வரமீவார்—சிந்தை
தளராதியற்று கெனத் தந்தை மொழியத்
தளராது நோற்ருன் தனித்து. 232

மூகனுந் தானவனே முன்னிச் சுயோதனனும்
ஏகென்ருன் நற்றவத்தை யீடழிக்க—மூகவனு
மீண்டியே கொல்வதற் கேனத் துருவாகி
வேண்டியே சென்ருன் விரைந்து. 233

வேடனுர் விட்டகணை பின்னிருந்து முன்னுக
ஈட்ழிந்த ஏனத்தை எய்தலுற்று—வேடனுர்
ஊன்கருதிச் சாடலின்நான் ஓடிவரு மேனத்தை,
ஏன்கருதி யெய்தையென்ரு ரேய்ந்து. 234

எற்காக்க வெய்தேநா னேனத்தை நின்குடும்பந்
தற்காக்க கொள்ளுவாய் தானென்ருன்—சொற்கேட்க
வேடன் சினந்துமிக மெய்த்தவனே லாயுதமேன்
காடன்முனங் கூறென்ருன் காண். 235

பாண்டவரி லர்ச்சுனனுன் பாசுபத மேற்கவந்தேன்
ஈண்டுவளர் வேடனி யேகென்ற—பாண்டவனே
வேடர் குலத்தின் விரோதி தனித்தானல்
வேடருயி ருண்பரென்ருன் மேல். 236

சங்கரனும் வேடுவனேச் சம்பிரதம் வேண்டாங்காண்
சிங்கந்தானென்று நனி தினமதாய்த்—தங்கிடினும்
பல்லா யிரம்யானே பார்த்துவெலப் போமோதான்
நில்லாது போவெனவே நேர்ந்து. 237

வீரனைத் தேடி விழைகின்றேன் போர்புரிய
வாராயென் றீர்க்கவந்த மாதவனும்—நேர்தலுமே
கற்பார்போல் வேடுவனர் காட்டி மயங்கும்வகை
விற்போர் புரிந்தார் மிக. 238

ஆச்சரிய மேலிட்டா லான விருவோரில்
மாச்சரியந் தான்கொண் டுமாபதியார்—ஓச்சுகணை
விற்பேர் நாணைத்துணிக்க வேடனு ருச்சியிலே
கற்போலத் தாக்கினன் காய்ந்து. 239

அண்டர்களோ வேதமுந்தா னுராய்தற் கொல்லுமோ
அண்டமெலாந் தானு மரும்பொருளி—னண்டமதில்
பட்டவடி யெல்லார்க்கும் பட்டவகை யான்விரித்தல்
கட்டமென விட்டனனே காண். 240

ஈச னலனே விறுதியா மற்போரில்
நேசனேல் வாவென்ன நீங்காது—பேசிடமேல்
கற்கவணில் வீசுதல்போற் கர்த்தரைத் தானெறிந்தான்
மற்கொண்ட வர்ச்சுனனு மன். 241

வேடன் சினந்துமிக மேனி யிளைப்பாறி
சாடுவே னென்றவனைத் தான்றாக்கி—ஓடியே
வானேகத் தானெறிந்தான் மாபனையி னேலெனத்
தானுக வீழ்ந்தான் றலம். 242

வானேகு மர்ச்சுனன்வென் மச்சகுறி பார்த்துத்
தானே வியந்தருளுஞ் சங்கரியு—மானேர்வார்
வுள்ளங் கவர்ந்திடுவோ னென்னுர் மனனடுக்கங்
கொள்ளுந் திறத்தனென்றுள் கூர்ந்து. 243

காட்சிக் கரியபரங் காட்சி யளித்தருளு
மாட்சி தனைக்கூற வல்லேனே—நீட்சிகொளும்
கானெல்லாந் தேவர் கணஞ்சூழ்ந்து நிற்கவிறை
தானுகத் தோற்றத் தவன். 244

கண்டு களித்தான் கவினு ருமாபதியை
வண்டமிழ்ச் சொன்மாலை வனைந்துநின்றுன்—கண்டவிறை
வேண்டுவரங் கேளென்றுன் மெய்விடு தாவென்றுன்
பூண்டதவக் கோண்மறந்து போய். 245

கானத்தில் வேடுவனுய் காளத்தி யாம்பதியில்
ஏனத்தின் காரணமா யெற்சேர்வை—நீநத்தி
வந்த வணம்படைதான் வாங்கென் றவன்மகிழத்
தந்தான் படையைத் தகை. 246

மாலயனு மிந்திரனு வாழ்த்திப் படைகொடுத்தார்
சால மெனப்பரமன் றுன்மறைந்தான்—சீலனென
இந்திரனுந் தன்றேர்மே லேற்றிக் கொடுபோந்தான்
அந்தரத்தில் தேவநக ரம். 247

வானகரைச் சோடித்து மாமகற்குச் சூட்டிமுடி
தானமரு மாதனத்தே தானிருத்தி—மானவனைத்
தேவரெலாம் வந்திக்கச் செய்வித்துத் தானெழுந்து
மாவரநீ தாவென்றான் மன். 248

உன்னுணை யேற்றங் குடனியற்ற லென்கடனே
என்னு குருநூல் இயம்புதல்தான்—உன்னலையோ
வென்றுபணிந் தானை யிறுகப் புலிபகையை
கொன்றேவா வென்றானக் கோன். 249

மாதலியுந் தேர்கடவ வானுடு பின்னுகக்
காதலியைத் தேடினவன் கண்டாற்போல்—தீதிலியா
மீச னிடம்போ ரியற்றினேன் றானவராம்
நீசரிடம் போனான்போர் நேர்ந்து. 250

சித்திரசே னன்றாதாற் றேர்ந்த வவுணகுழாம்
அத்திமுத லாஞ்சேனை யாவோடு—நத்தியே
மேகங் கவிந்தாற்போல் மென்மேலு வந்தார்போர்த்
தாகந் தவிர்ந்ததென்றே ரான், 251

வந்தான் மனிதனென மன்னித்தேம் போமென்றார்
தந்தான் பலபகழி சவ்வியாசி—விந்தையாக்
கண்டா ரிவன்சமத்தைக் கைகலந்து போர்செய்யத்
தண்டாது வந்தார் சமைந்து. 252

சென்றுற்றார் தாந்திரண்டு செல்லென்ன பந்திசெய்து
நன்றல்லார் கூட்டத்தை நாடியே—நின்றெய்தான்
ஓரொருவர் தந்நேரே ஓங்குபோர் செய்வான்போல்
ஓரொருவ ருங்கண்டா ருற்று. 253

தீங்கே புரியவுணர் செய்வஞ் சனையாவும்
அங்கவித்தான் பற்குணன்று னன்னவர்கள்—நீங்காமல்
போர்புரியப் பாணம் புதுவகையாய் ஏவவவர்
ஆரிவ னென்றுள்ளவிந்தா ராங்கு. 254

உள்ளவிந்து சாவாரொழியத் தலை தளிர்க்க
எள்ளி வருவாரை யிறுப்பதற்கங்—குள்ளுகையில்
போக்கினான் காணார் புதுவகையாம் பாணங்கள்
மூக்கின்மேல் கையானார் முன். 255

வெட்டத் தலைதளிர்க்கும் வீணர்களை மாய்த்தற்குக்
மட்டமையா தெண்ணுங்கால் வான்மொழிதான்—திட்டமு
காதிற் புகுந்தவுரை கண்டுதிறப் பாசுபதம் [டன்
ஓதிவிட்டான் மாய்ந்தா ரொருங்கு. 256

பாகன் வியந்தானாய் பற்குணனற் றாள்வீழ்ந்து
நாகம் புரக்கவந்த நாயகனே—மூகப்பேர்
தானவன்ற னாரிதுவே தங்கு மசுரபகை
வானவர்க்கு தீர்ப்பையென்றான் வந்து. 257

நன்று செலுத்தென்றுன் நாடறுபத் தாயிரரும்
கொன்று களையவில்லைக் கோட்டினுன்—யன்று
விசயற்கு வென்றி வினைகுறிகள் மேவ
அசுரற்குத் துற்குறிக ளாச்சு. 258

காலகே யர்தவமும் கஞ்சன் களித்துவந்து
மூலமா யிந்தபெரு முன்வரமுஞ்—சீலமிலார்
செல்வஞ்சேர் பல்வளமும் செப்பரிதா லன்னவரின்
வில்வன்மை யென்னேது வேன். 259

ஆலமே யன்ன ரறுபதி னுயிரராம்
காலகே யர்தம்மைக் கண்டானே—ஓலமென
வாய் விட்டுத் தானலற வான்கணைகடுவினுன்
சாய்ந்திட்டா ரெல்லோருந் தான். 260

அன்று தவத்தா லயனிடத்து வாங்குவரம்
சென்றுவிட நாளுந்தான் சேர்ந்ததோ—வென்றி
யிரணிய மாபுரத்தை யேகி யெரித்தான்
தரணிவாழ் வில்விஜயன் ருன். 261

வந்தா னருச்சுனனும் வானவர்கோன் ருன்களித்துத்
தந்தான் முகமனுரை தானேற்றுக்—கந்தனன்ருள்
போந்த வுலாவெனவே போற்ற வரம்பையர்கள்
போந்தா னுலாவே புகன்று. 262

கானிற் றருமனிடங் காண்டீப னற்புகழைத்
தானுரைக்க ரோமசனைத் தான்போக்கி—மேன்மகற்குக்
கான நடனக் காட்சி சங்கீதமெலாம்
மான வியற்றினுன் மன். 263

ஆடு மடந்தையரில் அன்னவனை யூர்வசியும்
நாடிவரப் பாட்டியென நைந்தவளும்—பேடியுருக்
கொள்வா யெனச்சாபங் கூறினுள் விண்ணவர்கோன்
வின்வான் வருந்தி மிக. 264

ஊர்வசியே யானறிந்தேன் உன்சாபம் பார்த்தனுக்கு
ஊர்வரைந்து தங்கள் உருமறைய—ஓர்வருடம்
வாழுங்கால் வந்துறவே வையென்ருன் அன்னவளும்
வீழும்வகையாக வென்ருள் மேல். 265

வானின்று போந்தமுனி யர்ச்சுனர்க்கு மாதவனுந்
தானன்று தந்த தனுவோடு—வான்சென்ற
ஆற்றலெலாங் கூறி அறமகனு மாங்குள்ளார்
தேற்ற வருளினுன் சீர். 266

வந்த முனிவரொடு மன்னவனுங் கானகத்தே
வுந்து முனிவரெலா முற்ருய்ந்து—சிந்தையவர்
தான்களிக்க வந்தித்துத் தாபதரி னுசியெலாங்
கோன்களிக்க பெற்ருனே கூர்ந்து. 267

வான்முதலாம் பூதங்கள் வந்த விதம்பலவு
மூன்முதலாஞ் சீவர்கடா முற்றனவு—மேன்முதலாந்
தீவாந் திரத்திலுள செய்திபல வுஞ்சொன்னார்
தேவா முனிவரதர் தேர்ந்து. 268

கூறுங் கதையிற் குபேரனூர் தன்னகரில்
கூறுங் குளம்புட்பங் கொண்டதென—நாறும்பூ
வண்ணங் குணமெல்லாம் வர்னித்தா ரப்பூவில்
எண்ணம்பாஞ் சாலிகொண்டா ளே. 269

மேனி யிளைத்த விதங்கேட்ட வீமனிடம்
பூனிமித்துங் கூறிமிகப் பொங்கினாள்—மானிமித்தம்
நாயகனைத் தானிழந்த நல்லாளைத் தானெண்ணி
நாயகனை யேவிலேன் நான். 270

என்றுளைத் தானோக்கி யீயாது பூவுனக்கு
குன்று மெனப்புயத்தைக் கொள்ளுவதேன்—இன்றுனக்கு
அப்பூவைத் தானீந் தனங்கொள்வே னானென்று
செப்புதலோ டேகினான் தேர்ந்து. 271

வனமும் வனாந்திரமு மாமலையும் பிந்தத்
தனத னறுங்காவிற் றானாய்—வனசமலர்
கொய்வானைக் காவலர்கள் கூடிப் பிடிப்பதன்முன்
எய்தானே பாணத்தை ஏய்ந்து. 272

அந்தோ யியக்க ரணியணியாய் முன்னூற்று
வந்தோரை மாய்த்தானே மாமன்னன்—வுய்ந்தவர்போய்க்
கூறப் படைதனக்குக் கோமானு மாங்கெய்தி
பேறப் படைவிலக்கிப் பின். 273

வீமனை வந்த வினைகேட்க வாங்கவனு
மாமலர் கொய்யவென வாயுரைக்க—மாமலரை
போதுமள வுங்கொளெனப் பூரித்துக் கொண்டகன்றான்
மாதுமகிழ் வெய்திடவே மன். 274

பாண்டவர்வாழ் கானம் பரிமளிக்க வாசமெங்கும்
ஆண்டடைந்த செய்தி யறைந்தவரோ—டண்டுமர
மோங்குமந்த கானகத்தில் உற்ற முனிவருடன்
தாங்குவினை செய்துசரித் தான். 275

வானளகைக் கோமான் மலரோ பரிபோன
தானவகைக் கேட்டுத் தடுமாறி—மானிடரால்
இன்றிதுவேல் நாளை யியக்கரூர் கொள்ளைதான்
கொண்டனரேற் காப்பரெவர் கூர்ந்து. 276

மானம் பொருதவுரை கேட்டு மணிமானுந்
தானன்றங் கில்லா தனகூறி—தானுளனேல்
எவ்வுலகா ரெத்திறத்தா ரென்றாலு மென்வலியால்
தெவ்வுலகஞ் சேர்ப்பனென்றான் தேர்ந்து. 277

மணிமான்றன் சொற்கேட்டு மாண்பெய்தி மன்னன்
திணியா தஞ்ரெனவே தேர்ந்தங்—கணியாலே
நல்விழாச் செய்தளகை நாதன் மகிழ்ந்திருப்ப
மல்விழாத் தோரான் மலை. 278

வீமன் பிணக்குற்ற மென்கொடிக்காய் மீண்டொருக்கால்
மாமலர்தான் கொள்ள மனத்தெண்ணி—காமன்றேர்த்
தென்றலிற் செல்வான்போல் தேவளக மாநகரிக்
குன்றின்கண் வந்தான் குறித்து. 279

காவலர்க ளோடிக் கழறமணி மானடைந்தான்
பாவலர்கள் வாதிக்கும் பண்பெனவே—ஓவலின்றி
போர்புரிந்தார் மூன்று பொழுதாக வாங்கவர்போல்
போர்புரிவா ருண்டோ புவி. 280

வேடிக்கை காண்பதற்கு மேலுற்ற யாவர்க்கும்
கூடிக் கணிப்பரிது கோட்டத்தை—நாடிப்பின்
வாறி யடித்தான் மணிமா னுயிர்போக
கூறியமு தானளகைக் கோன். 281

உன்போ லெனக்கினியா ருற்றுப் படைக்கரசாய்
மின்போலும் வாளேந்தி வெல்லுவார்—அன்பவெனச்
சொன்னந் தரசலறி குளுற்றுத் தன்படைக்கு
மன்னறியா தேங்கினான் வான். 282

நான்மூன்றாய்க் காணாது நைந்தே யுரோமசனார்
தான்முனர்ப்போய்ச் சேவித்துத் தன்றம்பி—மாண்பெண்ணி
யுற்ற துரைமினென வொன்றி மணிமானை
செற்றதுரைத் தானவனுந் தேர்ந்து. 283

அவ்வளகைக் கோனை யவமதித்தல் பாதகமே
செவ்வி தலவின்னே சீர்செய்ய—இவ்விடத்து
வீமன்செய் வாரற்கு வேண்டுமென வெண்ணினார்
தாமன்பால் வந்தானே தான். 284

வந்தவனற் றேரூர்ந்து மாமுனியோ டாங்கெய்தி
கந்தருவ மன்னகரைக் கைதொழுது—குந்திசுதர்
தானிரங்கி கான்மகனைச் சந்தித்து நொந்திரங்கிக்
வானளகை நாதன்பால் வந்து. 285

ஈசற்குத் தோழ யியக்கர் பெருமானே
நேசற் கருளு நிதிக்கே—பேசுதற்குச்
சின்னஞ் சிறுமதியோன் செய்த பெரும்பிழையை
தன்னெஞ் சகற்றியருள் தா. 286

என்றேத்த நற்றரும னேதுவினை ரோமசனார்
நன்றே விளக்கி நவின்றாரே—குன்றா
மணிமானு மாவிடனால் மாய்தற்கு நேர்ந்தசொலை
கணியா வுரைத்தானே காண். 287

ஆதலா லிந்த வயர்வை யகற்றுகவென்
ஞேதினவ னுமந்த வுரோமசனே—காதலால்
போற்றியள காபதியாம் பூமானும் பாண்டவரை
ஏற்றிப் புகழ்ந்தா னெடுத்து. 288

தன்னகரி விஞ்சை தனைக்காணச் செய்வித்து
மன்னவன்றன் தேவிக்கு மாமணிபூண்—பொன்னுடை
வேண படிப்பூட்டி விருந்தா யுபசரித்து
மாணப் புகழ்ந்தானே மன். 289

பஞ்சவரும் வேண்டியவா பண்பாய் விடையீந்தான்
விஞ்சு முனிவருடன் மீண்டவர்தா—மஞ்சமெனுந்
தேரேறிக் கானகத்தே சேர்ந்தார்கள் தேர்விசயன்
தேரேறி யாங்கானுன் றேர்ந்து. 290

வந்தவர்க டத்தமது மாண்புணர்த்த மாட்சிமையால்
விந்தமெனப் பூரித்தார் மின்னலின—தந்தம்போல்
துர்வாச மாமுனியுந் தோன்றத்துர் யோதனன்பால்
கர்வேச னேற்ருனே காண். 291

ஆதரித்து நல்விருந்தா லான்ருேனே யுண்பித்துச்
சோதரிட மிவ்விதமே சோறுண்ண—வோதினனே
நன்றென்று வாக்களித்து நாடினர் கானகத்தில்
கன்றடைந்த வாவெனவே காண். 292

மாமுனிவர் தாள்போற்ற மன்னவர் தேவியுடன்
ஆமுனிவர் சொல்லா லறிந்தவராய்—மாமுனியை
நீராடச் சேர்ப்பித்து நேயமாய் கண்ணனையே
சீராட வெண்ணினர் தேர்ந்து. 293

ஆங்கடைந்த கண்ணன்பா லச்செய்தி கூறுதலும்
தீங்கெய்தா தென்றவனுஞ் செப்பியே—வோங்குமுனி
வுண்டவா றுன்னுதலு வுற்றமுனி தேக்கெடுத்து
விண்டகன்ரு ருசிமொழி விண். 294

இன்னுரைக டந்தருளி யேகினு னக்கண்ணன்
பன்னும் தவத்தோனும் பார்தனிலே—மன்னிமிக
வானுள் சுமித்திரனு மாமுனிவன் ருன்வளர்த்த
வூணுங் கருநெல்லி யோர்ந்து. 295

பாஞ்சாலி யாந்திருவு பார்த்தனிடந் தான்வேண்ட
ஆஞ்சோலை தேடியவ் வாமலகம்—பாஞ்சாலி
யுண்ணப் பறித்தானுங் குற்ருர் முனிகாணின்
திண்ணஞ் சபிப்பரென்ருர் தேர்ந்து. 296

சாபத்தால் பட்டோர்கள் தாமனந்த மாதலினல்
தாபத்தா லம்முனிக்குத் தானஞ்சி—ஆபத்தில்
எண்ணத் திருமால்தான் யெய்தவவர் தம்பிட்த்து
நண்ணியன சொன்னு னரன். 297

பற்றுமனங் கருதல் பஞ்சவர்கள் சொல்லுதிரேல்
அற்றகனி சேருமென்றுனக் கண்ணன்—சொற்லைக்கேட்
டேதமிலா வேதந்தானிந்தமொழி தெய்வத்தின்
போத வளர்தலுமிப் பூ. 298

தீதெல்லா மாய்ந்துவளந் தேங்கி வளர்கவெனும்
ஈதலது வேறில்லை யென்றுனே—சூதாலே
கங்கைத் திருநாடு கைவிட்டுக் கானகத்தே
தங்கைவர் முன்னுந் தவன். 299

மற்றோர் மனையாட்டி மாதாமற் றோர்செல்வம்
பெற்று லதுவெட்டிப் பேசுவசை யுற்றுலோ
தீமையா வெண்ணுஞ் சிறந்த மனப்பண்பை
விமனுரைத் தானே மிக. 300

மானமே காத்தல் மனிதற் குகந்ததென
ஆனவே சொன்ன னருச்சுனனு—ஞானமே
கல்லா தவர்தம்மைக் கண்ணியமாய்க் காணுத
சொல்லா லுரைத்தான் துணிந்து. 801

தந்தைதாய் பெண்டு தனையர் சகோதரரும்
சிந்தை மிகுதோழர் திரவியமும்—அந்தமிலாச்
சத்தியம் ஞானம் தருமம் பொறைதவமும்
நித்திய வெங்கட் காவாய் நீ. 302

என்றே யிருவ ரியம்பத் துரோபதையு
நன்றே யெனக்கைவர் நாயகராய்த்—துன்றமற்றை
நங்கையருக் கோரொருவர் நாயகராய் மேவிநீத
மிங்கிருத்த லென்ன வென். 303

என்று மனமெண்ணு மெண்ணமி தென்றுரைத்தாள்
அன்று பழமரத்தோ டாயிவெனவே—கன்றதனல்
நின்று விளவெறிந்த நித்தியற்கே தற்புதமோ
நன்றிருந்தா ரைவர்பினோர் நாள். 304

பஞ்சவரைக் கொல்வதற்குப் பாவிதுரி யோதனனு
வஞ்ச மியற்றுகிற மாமுனியை—நெஞ்சத்தால்
எய்த வழைத்தவன்பா லிந்து நிதிக்குவையை
செய்திடென்றுன் பூதம்வரத் தேர்ந்து. 305

அப்பூதந் தானுன்ன ஐவர் படுவாரேல்
இப்புவில் நீர்தாமே யீசரனு—வொப்பநிற்பீர்
காணென்று தானேத்த காளப்பேர் மாமுனியு
என்று வொப்பினனே யேய்ந்து. 306

வேப்பெண்ணெ யெட்டி விரகாலே தீவினையை
காப்பெண்ணிச் செய்தானே காவுபலி—பூப்பென்ன
விந்தம்போற் பூதந்தான் வேலைதா வென்றெழும்ப
சிந்தென்று னைவரினைத் தேர்ந்து. 307

ஈதாக வாங்கே யெமனு ரறிந்திதனைத்
தீதாகா வண்ணந்தன் சேய்தனக்கு—மீதாகு
மிந்திரனே டெண்ணி யிருவருமக் கானகத்தில்
தந்திரமே செய்தார்க டாம். 308

விருந்தினுக்கா யைவரையு வேண்டினரா யாங்கு
வருந்தியே யண்மை வனத்தில்—திருந்தவே
யூட்டி யுணவதனி லுப்பை யதிகமிட்டக்
காட்டில்வர விட்டாரே காண். 309

ஐவருக்குந் தாக மதிகரிக்க வக்கானில்
வுய்வதற் கோர்நிழலி லுட்கார்ந்து—செய்வதற்குத்
தானென்றுந் தோற்ருது தண்ணீர்க்குத் தம்பிகளை
கோனன்று விட்டானே கூய். 310

கண்டார் குளமொன்று கான்றேடி நீரினையே
யுண்டார் கரையேறி யோய்வுற்ருர்—திண்டாடி
நால்வருஞ் சாய்ந்தார்கள் னஞ்சென்று தானெழுதி
கால்வருவி மன்னேடு காண். 311

தண்ணீர்க்குப் போயுள்ள தம்பினரைக் காணுது
வுண்ணீர் மிகவேட்ட வுத்தமனுங்—கண்ணயர
அவ்வலகை யாவியற்ற ஐவரிணை யுண்ணற்கா!
செவ்விதேன வந்தனவே தேர்ந்து. 312

காள முனிவரரைக் கண்பிதிரத் தானடிக்க
மாளவரு பூதமுந்தான் மாண்டனவே—மீளத்
தருமனுந் தானுணர்ந்து தம்பியரைத் தேடிப்
பெரும னுணர்ந்தானே பின். 313

தம்பியரைக் கண்டலறி தண்ணீர் விடமென்று
தம்பி யெழுதுமுரை தானேர்ந்து—வெம்பியே
தண்ணிரை யுண்டுவிட்டு தானு மிறப்பலென
தண்ணீர்பால் சென்ருன் தனித்து. 314

நீர்கொள்ளக் கைநீட்ட வில்லென் றசரீரி
வோர்சொல்லு மேலே வுரைத்தருள—யாரென்ருன்
தண்ணீர் விடமெனினுந் தக்கபதி லெற்கீந்தால்
லுண்ணீரா முய்வா ருவர். 315

கற்பனவுங் கேட்பனவுங் காய்நலுட னெய்யனவு
விற்பனவுங் கூறியே நீரருந்தில்—மற்புயனே
எல்லாம் பெறுவை யெனக்கூறும் வான்மொழிக்கு
நல்லான் பதிலுரைத்தா னன்கு. 316

தப்பறவே கற்றிடலாந் தற்பரன்சீர் கேட்டிடலாம்
தப்பதனைக் காய்தலாந் தானேற்கை—யற்பமாம்
என்று மிருப்ப திசையே யெனவுரைத்தான்
மன்ற தருமனு மன். 317

அந்த கனுந்தோன்ற வடிதாழ்ந்தா னற்றருமன்
முந்த வெடுத்துச்சி மோந்தணைத்து—மந்திரந்தான்
கூறி யெழுப்பெனவே கோச்சகா தேவனையே
கூறி யழைத்தான் குறித்து. 318

முன்னோ னிருக்க முறையின்றிப் பின்னவனை
யென்னோ வழைத்த தியம்பென்றான்—மன்னவனு
மத்திரையின் பிள்ளை வரவே முதற்கடனும்
இத்தரையி லென்று னிறை. 319

மற்றவருந் தானெழும்ப வாழ்த்திப் படையருளிக்
கொற்றவருக் குற்றதெலாங் கூறிப்பின்—தெற்றனவே
வானின் மறைந்தருள மாதரும னோடைவர்
கானிற் புகுந்தார் களித்து. 320

முற்றிற்று

## விராடபர்வம்

---

அன்றழைத்த குஞ்சரத்தை யாளுதற்காவெம் முதலை
கொன்றளித்த கோமானே கோபியர்கள்—நின்றழைக்க
ஆட்கொளுங் கள்வா வரியேவெனத் துதித்தால்
ஈடு நமக்குண்டோ விவண். 321

எந்த வரசி லிருத்த லுசிதமென
சிந்தைகொளப் பார்த்தன்றான் தேர்ந்தபடி—முந்தவே
மச்ச வளநாடு வந்தணங்கி னுலயமுன்
நச்ச விருந்தார் நவில். 322

வன்னி மரப்பொதும்பில் வைத்தே படையனைத்துங்
கன்னி மறையாலே காப்பிட்டு—முன்னவனும்
வேத முணர்குருவாய் மேவ விராடனிடம
போதவுணர்ந் தேற்றான் புகன்று. 323

அஞ்ஞாத வாசமதை ஐவருமே பற்றலினால்
இஞ்ஞான்றனை யடைந்தேன் என்னலுமே—அஞ்ஞான்று
ஆதரித்து போற்றித் தாமைவருந் தில்லரே
நீதெரித்துக் கூறென்று னேர்ந்து. 324

தன்னுமங் கங்கனெனத் தான்கூறி யைவரிதம்
முன்னு வுரைத்தவையில் முன்னிருந்தான்—பின்னுக
வீமன் பலாயணனாய் வேந்தனை வந்திக்க
தாமன்பா லேற்றானே தான். 325

நகுலன் பரித்தலைவ னானமென் றாங்கே
நகுல னனிபோற்ற ராயன்—மிகமகிழ்ந்து
தன்பரியைக் காக்கவென தானேற்று னர்ச்சுனனும்
பொன்பரியு மாடைதான் பூண்டு. 326

சிங்காரப் பேடியாய் தெண்டனிட்டு தானேத்தி
அங்காடல் பாடலுட னுயிழைக்கு—இங்காருங்
காணுப் பலவித்தை கற்பிக்க வல்லளெனப்
பேணு மகிழ்ந்துரைத்தான் பின். 327

இத்துறையி லெண்ணி யிருந்தோநற் பேடியால்
வுத்தரையை கற்பிக்க வுன்னியே—நத்தியவா
தெய்வத் தருள் தானே செய்தவமோ வாங்கவடான்
வுய்விக்க வந்ததென்று னோர்ந்து. 328

பின்னொருநாள் பாண்டவரின் பின்னோ னிடையனென
மன்னி யரசனிடம் வந்தணுகி—மன்னவனே
யேத்த வரச னினியமுக மன்கூறி
ஆத்த பதந் தந்தருளி னுன். 329

மச்சநா டாளுகிற மன்னன்மா தேவியிடம்
பச்சை மயிலொப்பாம் பாஞ்சாலி—யிச்சையால்
வண்ண மகளாகி வந்தே வணங்குதலு
மெண்ணம்யா தாரென்று ளேய்ந்து. 330

பஞ்சவர்கள் தேவிக்குப் பணிசெய்வே னஞ்ஞாதம்
பஞ்சவர்க ளானுருன் பால்வந்தேன்—அஞ்சலெனக்
காவாய் சின்னுளென்று கைகுவித்த கன்னிதனே
பாவா யிருவென்றுள் பாங்கு. 331

மன்னர் பெருமாட்டி வண்ணமக ளைப்பார்த்து
மன்னர் வலியரோ மாதோடும்—அன்னவர்கள்
பாவியால் காடுரைந்தார் பாவ மெனவருந்துந்
தேவிபால் சொன்னு டிரு. 332

ஐவர் களுமிவ்வா ருண்டிருக்க ஓர்மல்லன்
மெய்வலிமை காட்டி விராடனிடம்—கைபுகுந்து
தேசமெலாம் வென்றுசிறந்தேன் சிறக்கு நின்பால்
நேசமுற வந்தே னென. 333

விராடன்றன் மாமல்லர் மெய்வலியும் வந்தோன்
பராவு முடல்வலியும் பார்த்து—ஒராதனுரை
கொள்ளக் குருவறிந்து கூறும் பலாயணன்றுன்
எள்ளி தொலேப்பா னென. 334

என்றதனைக் கேட்டுமுன மேகவுறு மல்லர்தமை
ஒன்றொருவ ராகவிட வோட்டிவிட்டு—வென்றுநின்ற
வீமனிடம் வந்து விறல்காட்டி தோள்புடைத்து
மாமலேபோல் போர்மலேந்தான் மன். 335

கைக்குத்துங் காலிணைப்புங் கண்டவர்கள் தான்திகைப்ப
மெய்க்குத்துங் கிமோடு மேலுறலுஞ்—மொய்க்கேற்ற
தண்டடியு முண்டாவுந் தான்கொடுத்த மல்லனைக்
கொண்டடித்தான் விமன் குறித்து. 336

மன்னன் சுயம்பாகி மாபலத்தால் வெற்றியதா
மன்ன மதையுண்டா னுமென்ன—வன்னமணி
நற்பரிசு தானல்கி நாவிற் கிதமாக
சொற்பரிசுங், கொண்டான் றுணே. 337

மன்னன் விராடன்றன் மைத்துனன் கீசகப்பேர்
மன்னன்மா தேவியினை வந்தித்து—பின்னவனும்
போங்காலைப் பாஞ்சாலன் பூம்பாவை யைக்கண்டு
வேங்காமங் கொண்டான் விரைந்து. 338

மற்றவர்தஞ் சொல்லாலம் மங்கைபணிப் பெண்ணுமென்
றுற்றறிந்து நங்கைபா லுற்றவவன்—முற்றுமே
தன்னுண்மை கூறி தனக்குரிய ளாகென்ருன்
பின்னுவ தெண்ணுத பேய். 339

அந்தோ வரச ரடிமையைப் பெண்டாளில்
நிந்தையா மாண்டன்மை நில்லாது—நந்தெனக்குக்
கந்தருவர் காப்புளது காணிற் றுணித்திடுவார்
உய்ந்திடநீ யேகென்ருள் ஓர்ந்து. 340

என்றுரைத்த பெண்டிருவை யிர்க்கத் துணிந்தானே
அன்றவளு மன்னவையை யண்டினளாய்—நன்றறியா
மூர்க்கன்றெடரல் முறையோ வென வழுது
காக்கவெனச் சொன்னுள் கதழ்ந்து. 341

பாஞ்சாலி கூற்றும்பின் பற்றுவோன் தீச்செயலும்
தாஞ்சாலக் கண்டவனைத் தண்டியாக்—கோன்செயலும்
மீசை துடிதுடிக்கும் வீமனையு நோக்கியசீர்த்
தேசிகனர் சொன்னுர் திறம். 342

போனந் தருந்தலைவ பொங்கும் வினைதமெலாங்
கானவிருந் தின்போது காட்டென்ருன்—மானவன்ருன்
மீண்டேக மன்னவனு மெய்க்குருவை நீதிவழி
தூண்ட வருந்தினுன் சோர்ந்து. 343

கங்குலிற் சந்தித்த கான்மகனு முன்னேனின்
தங்குறையைக் கூறுதலுந் தான்கேட்டு—மங்கையவள்
நாளெண்ணி மாற்று னலிவதற்குச் சொன்னவகை
கேளென்னக் கூறுங் கிளர்ந்து. 344

ஆமென்று வொப்பியுனை ரவ்விருவர் தங்கூற்றில்
வீமனெணந் தான்பொருத்த மேலாகத்—தாமநறுங்
கூந்தற் கொடியுங் குயிலனம்போற் சென்ருளவ்
வேந்தனுக்கு ஏடு விழ. 345

காமப்பேய் கொண்ட கசடனுங் கீசகனு
தாமங்கோய் பெண்ணணங்கை தானணுகி—மாமயிலே
கண்டா யரசனெடு கந்தருவர் காப்பெல்லா
முண்டோ வருளினிதா னேது. 346

தம்பால் தனித்துத் தயவாக வேண்டினனைக்
கொம்பனையாள் வீமனது கோளெண்ணிப்—பெண்பாலை
ஏற்கும் வகைபுரிந்தா யின்றிரா வூர்ப்புறத்தே
மேற்குள்ள மண்டபத்தே மேவு. 347

சாமங் கடந்தங்கே சார்ந்திடுவே னானென்ன
நேமங் கடந்தானு நேர்ந்தனவா—வோமந்தான்
நெய்விட்டாற் போல நினைந்தினிய பண்டங்கள்
கையிட்டுச் சென்றிருந்தான் காண். 348

வீமன் குறித்துள்ள மெல்லியளா வேடமிட்டு
சாமமிரண் டிற்கங்கே சார்ந்தானே—காமுகனுங்
கீசகனு மெண்ணுங் கிளியா ளிவளென்று
பாசமுடன் வந்தானே பாங்கு. 349

பண்டு பலகாரம் பற்பணிகள் பூமாலை
கொண்டுவந் தேன்யாவுங் கொள்ளென்னத்—தண்டதரன்
காரிருளி னுணம்போற் கட்டிடத்தின் கால்மறைய
ஆரிருள் கொண்மனத்தா னுங்கு. 350

நவ்வியே தேனேநீ நாணமே னென்னிடத்துக்
கொவ்வை யிதளாளே கூறென்று—செவ்விதாத்
தூணிலிரு கைநீட்ட துட்டன் கரம்பற்றித்
தாணி விழுத்தான் துணைந்து. 351

கீழே விழவெறிந்து கேடருநல் லாளியென
ஆழா வுரமதனி லாங்கேற்றி—பாழானன்
வெஞ்சிரத்தை மோத விளிவான்றன் றம்பியினை
குஞ்சரத்தைப் போலழைத்தான் கூய். 352

கீசகன்றன் கூவலினைக் கேட்டவன்றன் றம்பியர்கள்
பாச முடன்கூடி மிகுபண்பாகப்—பேசுமிடம்
உற்றுள்ளார் வீம னுடன்றடிக்க யாவர்களு
அற்றெழுழிந்தார் தீவினையி னால். 353

கந்தருவர் கொன்றுள்ளார் காவலன்றன் மைத்துனர்தாம்
சிந்தையா மென்றவரை நீற்றுவிட்டுச்—சிந்தையினிற்
துன்பந்தான் கங்கரது சொல்லாற் கழியமனத்
தன்புனனி யுற்று னவன். 354

துக்கந் தணியாச்சு தேட்டிணையுந் தான்வருந்திப்
பக்க மிருத்திப் பணிப்பெண்ணை—நெக்குருகி
அன்னையே வேறொன்று மாகாது காக்கவென
மன்னியா யென்றுளம் மாது. 355

அஞ்ஞாத முற்றிருக்கு மைவரையுந் தாமறிய
விஞ்ஞான வொற்றுவரை விட்டானே—அஞ்ஞாத
கால முழுவதினுங் காணாது தேயமெலாஞ்
சாலவடைந் தாரவர்க டாம். 356

தூதுவர்கள் சொல்லத் துரியோ தனன்கேட்டு
ஓதுமைவர் மாண்டதுதா னுண்மையென—மீதிநாட்
சென்றால் கருமங்கள் செய்திடுவோ மொற்றுவர்கள்
நன்று யறிந்தாரிந் நாள். 357

ஒற்றர் மிகமுயன் றும் ஊன்றி யறிந்திலரேல்
மற்றோ ரிறந்த வகையிதெனச்—சுற்றிருந்த்
கன்னன் முதலோர் கழறவே விட்டுமனார்
அன்னவர்க்கு வோதினா ராங்கு. 358

ஒற்ற ரறிதற்கு மொண்ணுமோ பாண்டவரைச்
சிற்றறி வாற்பிதற்ற றிங்காகு—மற்றவர்தாம்
தங்குந் தலந்தழைத்து தானந் தவமோங்கும்
மங்குமே திங்கோடு மால். 359

சிட்டர் மனங்களிப்பார் தெய்வக் களையுண்டாம்
துட்டர் படுவார்கள் சோரருமே—பட்டப்
பகலா மிரவும் பசிப்பிணிகள் திண்டா
வகலவர் வாழுமிடத் தாங்கு. 360

இச்சொல்லைக் கேட்டே யியம்பிடுவார் ஒற்றர்களும்
மச்சநா டதொக்கும் வண்ணப்பெண்—இச்சையினால்
கந்தருவர் சேகனைக் காதினா ரென்றவுரை
அந்தவள நாடுசொலு மால். 361

கீசகனு மாண்டமொழி கேட்ட திரிகர்த்தன்
நேசமுடன் றானெழுந்து நின்றுடியோய்க்—கீசகன்றான்
விந்தால் விராடன்றன் மெல்லியநல் மாடுகளை
போந்துபிடித் தால்வினையும் போர். 362

அப்போரிற் பின்னிடுமவ் வாண்டகைக்கா யைவருமே
தப்பாது றவர்விடை தாவென்றான்—இப்போதே
செல்லென்ன மச்சத்தின் தென்பா லணுகினான்
செல்லென்று தானை செல. 363

கானி விடையர் கலங்கி வருந்திடவே
ஊனி லுயிர்கொள்வா னுற்றனென—மானினைப்போல்
துள்ளி வெருண்டோடுஞ் சூன்முதலாங் காலிகளைக்
கொள்ளப் பிடித்தானக் கோ. 364

ஆயர் மொழிய வரசன் படையெடுத்து
மாய வெதிரிகளை மாட்டினான்—கூயங்கே
வேந்தர் பொருத விராடன் பிடிபட்டான்
சாந்தமுனி கங்கரறிந் தார். 365

வில்லால் பிடியென்று வீமனை யேவுதலும்
செல்வான் றிரிகத்தன் தேர்நேரே—வில்லூன்றி
எண்ணிறந்த பாணங்க ளெய்து பிணித்தானே
யெண்ணிறந்த சேனைநடு வே. 366

மன்னன் விராடன் மகிழ்ந்துதவி யானுர்க்குச்
சொன்ன னுபசாரந் தூயவனு—மன்னமுனி
உத்திரவாற் கட்டவிழ்த்து வொன்னுனே முன்னிருத்த
அத்தரும னீதிசொன்ன னுல். 367

தேர்தந்து செல்லென்ன சென்ருன் றிரிகர்த்தன்
கார்தந்த மாலை கடுகவே—நார்தந்த
பூவணியு மன்கூய்ப் புகன்ருனே நற்றருமன்
கோவணியோ டன்றிருக்குங் கோள். 368

சேனு பதியாந் திரிகத்தன் போயபின்னே
நானு வகையெண்ணி நாற்படையுந்—தானேக
மச்சம் வடபாலில் மாடுகளைத் தான்மடக்க
பட்ச முடனுனன் பாங்கு. 369

மன்னன்றன் வர்க்கமுல மாமறையோர் மூவர்களும்
கன்னன் விதுரனந்தக் காங்கேயன்—பின்னு
மதிரதரோ டத்தரதர் யானைபரித் தலைவர்
சதிராக வந்தாரே தான். 370

ஆய னொருவனங்கே அந்தோ குருகுலத்தோர்
தேயம் பிடிக்க திரண்டுற்ருர்—சேயாகு
முத்தரனே யுத்தரத்தி லுத்திரவு யாதென்ருன்
மத்திடுவோன் நற்றதியில் மன். 371

மச்ச மனன்மனைவி மாதர்கயி லாயுதங்கொண்
டச்சமறக் காமினென்று ளாங்கப்போ—திச்சையினுல்
ஈன்று வளர்த்தா யெனையு மறந்தனையே
சான்றெதற்கு சாரதிநீ தா. 372

தேரோட்டு வானுளனேல் சென்றே துரியனொடு
போரேற்று அர்ச்சுனனுர் போலவே—பேரேற்று
வந்த கவுரவரை வான்போக்கி மாடுகளை
தந்தாற் கவுரநீ தா. 373

என்னவவன் றங்கையா ளென்பேடி தேரோட்ட
மன்னவர்கள் மெச்சும் வலவனும்—அன்னவட்கு
ஒப்பில்லை யென்றதற் கொப்பினு னப்பேடி
குப்பென்று பூட்டுந்தேர் கொண்டு. 374

பேடிரத மோட்டப் பெரியோரை வந்தித்து
ஓடி ரதமூர்ந்தா னுத்தரனே—சோடித்த
தேரோடக் கண்டு திகைத்தானே சேனையெலாம்
போராடும் பேடியொடும் போய். 375

தேரை நிறுத்தென்று செப்பினுர்க் கப்பேடி
போரை யெணிக்கலங்கும் புத்திரனைத்—தேரற்காய்
எத்துணையோ சொல்ல இறங்கி நடந்தோடு
முத்தரனை தேர்பிணித்தா னேர்ந்து. 376

சாமுண்டி தானிருக்குஞ் சன்னதியின் வன்னியிடம்
தாமண்டித் தேரதனிற் ருனேறி—கோமுன்னம்
வைத்த படையெடுக்க மாபடையி தேதென்னு
முத்தரற்குச் சொன்னு னுதை. 377

அர்ச்சுனனுர் நற்கணையி தன்னுனு முன்னெதிரே
கர்ச்சனைசெய் வான்றேர் கடவென்ற—வர்ச்சுனற்குத்
திக்கடவு டந்துள்ள தேரனும னிதலுமம்
மாக்கடவ வொப்பினுன் மன். 378

பார்த்த னெனவே பயந்தே படையனைத்தும்
வேர்த்த பொழுதெண்ணி வீட்டுமனுர்—சேர்த்தியென
நூற்றுவர்க்கு முன்கூய் நுவன்ருர் பசுக்கடமை
யேற்றதென்ருர் விற்குருவு மேய்ந்து. 379

ஒற்றைத்தேர் காண வுளநடுங்கி வாடுறுவீர்
எற்றிற்கு வில்லொடுதே ரேறினீர்—இற்றைக்கு
நானே புரிவன்போர் நாரியா மர்ச்சுனனை
கானேகக் கன்னனென்பேர் காண். 380

என்ருலு மந்தைகொண் டேகலினி தாமென்று
தன்ருதை சொற்படியே தான்செய்தான்—குன்ருத
வஞ்சனையா நெஞ்சும் வணங்கா முடியோடு
நஞ்சகி கோள்கொடியோ னும். 381

விற்குருவும் பாட்டன் விதுர னிவரடிக்கு
சொற்கரையும் பாணங்கள் தூண்டினுன்—நற்சிடன்
அன்னுர் மகிழ்ந்திதனுல் ஆச்சரியந் தாமுற்று
என்னே யெனவியந்தா ரே. 382

சேனை கடலாத் திரண்டிருக்க வீரர்களுங்
கோனைக்கா வென்றிருக்க கோக்களொடு—மூனினைக்காத்
தெற்றிற்குச் சென்ரு யியம்பென்ருன் வான்முடியை
முற்றிக்கொ டாண்ட முதல். 383

சேயத் திடந்தனித்துச் சிக்கின யானையென
பாயப் புலியிடத்தாம் பாற்பசுவாய்க்—காயத்துச்
சிவனற்று மேவுந் திரியோ தனனிடத்து
மேவலுற்ரு ரெல்லாரு மே. 384

இன்ஞே ரதியா திவுளிவிஞ்சையாற் சென்றவ்
ஒன்னு னிடம்பசுவை யோட்டியே—வின்னுணை
கோத்து விராடநகர் கோவேக வேலியிட்டுப்
பார்த்தி பனையிகழ்ந்தான் பார்த்து. 385

வந்தே நெருங்கினதும் வந்தித்து முன்னேரை
நிந்தையே யுங்களொடு நேர்பொருதல்—நந்தியா
வட்டம் புனைபவர்க்கு மானுமித்ர கன்னன்பால்
இட்டப் படிவிடுவி ரே. 386

என்றேகிக் கன்ன னிரதம் பொடியாக்கிச்
சென்றேறு மச்சேமத் தேருடைக்கத்—தன்ருள்கள்
பிட்டம் படகன்னன் பின்காட்டி யோடலைக்கண்
பட்டவசு வத்தாமன் பார்த்து. 387

ஒண்டித்தேர் வில்லோ டொருவனென் றெங்களைமுன்
கண்டித்த வாயெங்கே கன்னப்பேர்—கொண்டுள்ள
வீரா நில்சொல்லென்ன வெட்கிவிரைந் தேமறைந்து
பாராமற் சென்ருன் பரிந்து. 388

வில்லா சிரியன் விசயன் முனந்தோன்றி
வில்லார் கணைதன்னை விட்டானே—நல்லானுந்
தற்காத்து பாணத்தால் தாக முடனுரைத்தான்
சொற்காத்தல் செய்யுமவன் சோர்ந்து. 389

ஒன்றறியா வென்னை யுலகி லிவன்சிறந்தா
னென்றறிய விஞ்சை யியம்பினே—யின்றடியே
னிற்பிழைத்த லொன்னுதே நீதியோ சற்குருவே
எற்பொருத யானிழைத்த தேது. 390

நின்னோடு போர்புரிய நீணு ளவாவுளவால்
என்னோ டிழைத்தபிழை யாவுமில—பொன்னுடு
தான்புரக்க வாளவுணர்ச் சங்கரித்த வித்தைதனை
நான்றெரியக் காட்டென்ரு னுல். 391

அத்தனுரைக்க வவன் றிரத்தைக் காட்டினன்
சித்தங் களித்திதனைத் தேறற்கு—நத்தினரேல்
ஆசிரியன் ருனென்ருல் அர்ச்சுனன்ற னுட்பவகை
பேசரிது யார்க்கும் பிற. 392

ஆசிரிய னேய்ந்ததற்பி னத்திபுரி நின்றெழுந்த
மாசேனை முற்று மதிமயங்க—ஆசுகந்தூய்த்
தாதையின்றி மற்ருேர் தலைத்துணிகொய் துத்திரனுல்
மாதுரக்கத் தேரூர்ந்தான் மன். 393

தன்னகருற் றஞ்ஞாதந் தான்கடந்தான் பார்த்தனென
மன்மொழியத் தாதை வகையாய்ந்து—நென்னலே
ஆதித்தன் தேர்ச்சுழலா லாகுநாட் டூர்ந்ததென
வோர்தி விளக்கினு ரோர்ந்து. 394

உத்திரையின் பொம்மைக்கு ஒண்டுகிலோ டூர்புகுந்தான்
உத்திரனை மாரதியா வுள்ளிருத்திப்—பத்தியினுல்
மாநகரோர் வென்றிகொண்ட மன்மகற்கு மஞ்சள்நீர்
தான்சுழற்றி திட்டிகழித் தார். 395

வந்தித்த சேய்தழுவி மாதேவன் றன்னருளோய்
தொந்தித்த போர்தன்னை சொல்லென்றத்—தந்தையற்கு
மைவளர்கண் பேடியல வல்விசயன் ருன்வென்ருன்
ஐவருளார் நம்ம தகம். 396

கங்கர் தருமர் கனிட்டன் பலாயணனும்
செங்கை வளைப்பேடி தேர்விசயன்—நங்கோயில்
ஆமான்றலைவர்தா மாண்டினையர் வண்ணப் பெண்
வாமான்பாஞ் சாலன் மகள். 397

இவ்வா றுரைக்க யியந்தான் விராடன் மகிழ்ந்
தைவரையு மச்சத் தணித்தாகச்—செய்யுபலா
மாநகரை நல்கி மகிழப் பணிந்தானே
கோநகரி நல்விழாக் கொண்டு. 398

முற்றிற்று

## உத்யோகபர்வம்

மாலென்ப தாம்பின்னை மால்வரையின் மாவிசும்பின்
மாவின் புயல்காத்த மால்வண்ணன்—மாலரவம்
பேரோத மேனியான் பேரோத நீர்கடைந்தான்
பேரோத மேனியான் பேர். 399

தங்கள் வெளிப்பாடு சொல்வித் தமக்கினிய
வெங்கதிர்வேல் வேந்தர்க்கு வெவ்வேறு—தங்கட்காம்
சுற்றத்தார் தென்னன் துளவணிக்குந் தென்னவர்க்கு
மொற்றத்தார் விட்டா ருணர்ந்து. 400

கண்ணுற்று வவ்வோலை கண்ணன் வரலானுன்
பண்ணுந் தவத்தின் பயனாக—நண்ணரிய
பாசுபதம் பெற்றுள்ள பாங்கன் விராடன்சேய்
கேசவனோ டானுன் கிளர்ந்து. 401

வந்த மகனோடு மாதவனை மச்சத்தான்
தந்தை யுடனவர் தானெதிர்ந்து—புந்திமகிழ்
வானர் களையாற்றி ஆங்கவரைப் போற்றினர்
நாளு வகையாலு நன்கு. 402

மன்னன் விராடன் மகன்செயலை மாலுரைக்க
மன்னன் முடியிந்து மாமகற்குக்—கன்னியினை
நன்னளில் மால்மருக னர்க்கீந்து தன்மருக
னென்று வடைந்தா னிவன். 403

மத்திரர்கோன் ஏகும் வழியிலூர்ண் சாலைதனை
அத்தருமன் பேரா லலங்கரித்துச்—சித்திரமா
உண்டு களித்தான் உரககொடி யான்றுணையாத்
தன்றனக்கு வேண்டவொப்பித் தான். 404

ஐவர்பா லுற்று அருங்கானி லந்துரியன்
அவ்வியத்தைக் கூற அறமகனு—உய்வதற்குக்
கோவே யருளென்னக் கொற்றவவுன் வேற்படை யால்
வீவனென்றுன் சல்லியனும் வேந்து. 405

தென்ன னெடுதுவரைத் தேவுமந்தப் பஞ்சவரும்
அன்ன விராடனுட னாய்ந்து—முன்னமொரு
தூதனுப்பி யந்த துரியோ தனன்மனத்தி
னேதுவினைக் காணவென்று ரீங்கு. 406

தங்கள் புரோகிதனுந் தௌமியனைத் தானுன்னி
எங்களது தாயத் தினைவேண்டி—பொங்கரவந்
தானுயர்த்தா னெண்ணத்தை சந்தாகி யுள்ளபடி
தானுணர்ந்து வாவென்றார் சார்ந்து. 407

காடுறையு மாண்டுங் கரந்துறையு மாண்டும்போய்
நாடுறைய பாண்டவர் நண்ணினருன்—னீடுரையில்
தாயத்தை வேண்டினார் தாவென்றான் றௌமியனு
மாயத்தைச் செய்மன்பால் வந்து. 408

எந்தைக் குரிய தெனதே யிடுகவற்றால்
தந்தைக் குரியதுமுன் றன்றேற்றான்—முந்தி
வலனு னெடுங்கொடிமேல் மாமுரசங் கொண்டா
னிகருய மென்னோ வினி. 409

காடுறைந்த பின்னைக் கரந்துறைந்தா லுங்கட்கு
நாடுதரு வேனென்ற நாப்புரண்டால்—கேடுவருங்
கொள்ளா துலகங் குறுகா டிருமகளும்
தள்ளாதே யேலென்றான் சந்து. 410

மூதாதை சொல்ல முனிந்து முகநோக்கித்
தீதாருங் கன்னனிது செப்பினான்—மூதாதை
பஞ்சவர்க்கா யிங்குப் பரிந்தோதிக் காரியங்கொள்
பஞ்சவரின் பட்சனென்றான் பார்த்து. 411

கன்னிகா சுல்கத்துங் காலிக்காம் போர்தனிலும்
உன்னிலைமை கன்னு வுணர்ந்துள்ளேன்—பின்னுகுங்
காரியத்தி னிதிதான் காட்டினே னென்றுரைத்தான்
ஆரியனுந் தாதை யவண். 412

சொன்னனே பின்றந்தை துட்டச் சுயோதனற்கு
அன்னவர்கள் பாக மவர்க்காக—உன்னுயேல்
சுற்றத் துடன்றுறக்கந் துன்னுவிப்பா னீயறிவாய்
நற்கொற்ற வீம னனி. 413

என்றுரைக்க மாதவரும் ஏற்புடைய தாதையொடு
தன்றந்தை தாயுந் தகவுரைக்க—சென்றந்தக்
கானே வதிதற்குக் கான்றே விடக்கொடியான்
தானேக விட்டானே சந்து. 414

வேந்தன் மறுப்ப விதுர னுரைத்ததுவுங்
காந்தாரி கங்கைமகன் கட்டுரையு—சேர்ந்த
வடிமலர்த்தா ரங்கர்கோன் வாக்கு முரைத்தான்
முடிமலர்த்தார் வேந்தற்கு முன். 415

தாமரையாள் கோனைத் தனக்குத் துணைவேண்டிக்
கோமருக கோனுகங் கொண்டவன்று—னுமைதனைக்
கேட்டுத் திருமாலுங் கேண்மை யமைச்சர்பால்
நாட்டினான் செய்வனவே நன்கு. 416

தங்கு தடையின்றித் தன்மனைபோ லத்துரியன்
சிங்கத் தவிசுற்றான் சிபதியு—மங்கொருபால்
கண்வளர்ந்தான் பார்த்தன் கடிவரவைத் தானுன்னி!
எண்வளர்ந்த வுள்ளத்தா னிண்டு. 417

ஒற்றாற் றுவரை யுறுநரனைத் தானேற்று
இற்றேவா வென்பா னியக்கிற்றே—பற்றாக
அம்மன்னைப் போவுனக் காகான் றுணையென்று
கைம்முன்னே யிட்டகோடி காண். 418

பார்த்தன் பணிந்து பதம்வருடப் பண்ணவனும்
ஆர்த்தெழுங்கா லங்கே யரசிருவர்—பார்த்து
முகம னுரைகூறி மோலியனைத் தாநோக்கித்
தகவுண்டயீர் சார்தலென்கொ ளுன். 419

சர்ப்பக் கொடியோனுந் தான்முன்னே தன்றுணைக்கா
நிற்பா யெனவந்தேன் நீதுயின்றாய்—பிற்போது
பற்குணன் வந்தான் படைத்துணைக்கா வென்றுரைத்தான்
நற்குணம்விட் டாள்வோ னயந்து. 420

திங்கட் குலம்விளக்குஞ் செல்வர்காள் வந்தவா
வுங்கட் குறுதி யுணர்ந்திடுவீர்—என்கையில்
எப்படையுந் தீண்டாம லெய்துவேன் மற்றோர்க்கு
ஒப்படைப்பேன் றுணையா வும். 421

கண்ணன் சொற்கேட்டளவில் காளக் கொடியோனும்
என்னும் படையெற்கே யீயென்றான்—கண்ணனே
மாசெலுத்த வாவென்று வாஞ்சையொடு யாசித்தான்
ஆசுகத்தால் கான்வேய்ந்தா னங்கு. 422

என்னுற்றி ரெண்ணியவா றிந்தே னிகலாது
நண்ணுவி ரென்று நவின்றானே—மண்ணளந்த
மேனிதவிர்ந் தாயனு மேவி மழைதவிர்ப்பான்
கானிலுயர் கற்கவித்தோன் காண். 423

தன்னவையுற் றிச்செய்தி சாற்றினான் மன்னர்பதி
அன்னவனு லவ்வப்போ தையகல—உன்னியுளான்
பாகற்கா பார்த்தனெனப் பாட்டன் பகர்ந்ததற்பின்
நாகமுயர் வேந்துரைத்தா னால். 424

ஆயர் படையனைத்து மாங்கெய்திப் பெற்றுளதன்
சேய பெரும்புகழைச் செப்பினான்—மாயவனை
ஆயுதந் தீண்டாமல் அன்னவர்பால் செல்லியன
மேயவைக்குச் சொன்னான் மிக. 425

நட்சத் திரமனைத்தும் நான்கொண்டேன் சந்திரன்தான்
மிச்ச மெனல்கடுக்கு மென்றானே—அச்சமிலா
மூதாதை கூற முனிந்தான் சுயோதனனு
மேதாம் படையிலியா லென்று. 426

பாட்டன் சினந்து பதரே படையதனைப்
பூட்டநீ காணி புகலகந்தை—நாட்டத்தாய்
யென்ற பொழுதாங்குள்ளோ ரேங்கிப் பரிதவித்தார்
அன்றலறிச் சென்ற தவை. 427

ஆயனொடு பின்னேனும் அர்ச்சுனனுந் தேரூர்ந்து
தூய தருமன்றன் தொன்னகர்க்கே—நேயமுடன்
வந்தாங்கு யாவர்களும் வந்திக்கத் தான்மகிழ்ந்து
சிந்தா குலத்தருமன் றேர்ந்து. 428

துக்கஞ் சுகமிரண்டுந் தொல்வினையா லுற்றதென
வொக்க மதிக்கு முரவோனே—யிக்கால்
மனவருந்திச் சோரும் வகைபகர்வா யென்னு
முனங்கூறும் பஞ்சவரின் முன். 429

தௌமியன் றூததனுல் தத்தளித்தேன் நீபோய்
ஒவுமினிய வாசகத்தா லொக்க—அவமின்றி
காப்பாயென் றேத்தினன் கண்ணனுந்தான் போந்தவன்பால்
ஏற்பா னுரையென்று னிங்கு. 430

ஆயவனே தூதாம்நீ யத்திநகர் மன்னவையில்
தாய மறுத்தாலைந்தூர் தான்வேண்டு—மாயவனே
பின்னுமது யெண்ணம்போற் பெற்றடைதி யென்றுரைத்தான்
மன்னுபுகழ் தங்கு மறன். 431

வீமனுட னுல்வருந்தான் வீறு பலபேச
யேமன்சேய் கையமர்த்தி யேகென்றான்—தாமநறுங்
கூந்தல் முடிப்பையென்றாள் கோபாலன் கேட்டருளி
ஆந்தூது செல்லு மவன். 432

கொண்மூக் கடுப்ப குறித்தவா தேரூர்ந்து
அண்மினன் சாத்தகியோ டாங்குக்—கண்மணியா
யெங்கு மெவருள்ளு மெய்தி விளங்குஞ்சீர்
சங்குடன்பஞ் சாயுதத்தான் றான். 433

அந்தகரு ற்றாங்கு ஆன்றோர் வரவிறங்கிச்
சிந்தா மகிழ்வோடு சேவித்து—வந்தாரை
நன்றாய்ந்து மன்னனிடம் நாளை வருதுமெனச்
சென்றான் விதுரனில் தேர்ந்து. 434

பாரிற் பிறந்த பயனுற்றே னின்றென்று
கூறி யுணவளித்தான் கோவிதுரன்—பூரித்துக்
கண்வளர்ந்து மற்றைநாள் கண்ணன் சபைக்குற்றான்
பண்ணளந்து பாடப் பலர். 435

மன்னர்க் கதிபதியு மாதவனைத் தானேற்றுப்
பின்னர் முகமனுரை பேசியே—னென்னல்நீ
போதுறைந்த செய்கை புகலென்ன கூறினான்
தாதுரைப்பார் நீதியுள சொல். 436

தந்தை யிருவருடன் தாதை குருமார்கள்
வந்திருந்து பஞ்சவர்க்கா மன்றுடப்—புந்தியிலே
கொள்ளா தகந்தையாட் கோமா னிருத்தலினால்
எள்ளா வுரைத்தா னிது. 437

உரிமை யிருவருக்கு மொக்குநா டொன்றை
யுரிமையுட னண்டாரு முண்டோ—செருவில்
வலியார் வலியாராய் மண்ணாள்வ ரென்றா
னெலியார் நன்னுட னுடன்று. 438

மன்னவரின் தாயமுடன் மற்றவர்கட் கைந்தூரும்
பின்னைந்து வீடிரந்தும் பேசினேன்—மன்னவனே
பார்தருவை யல்லையேல் பாண்டவர்கள் வேண்டாத
போர்தருவை யென்றான் புகன்று. 439

போரிங்தேன் செல்லென்ற புல்லோனை நல்விதுரன்
நேரும்போ ருன்னோடு நில்லாது—வோருகநீ
என்றாற் கிதுவறிந்து யிந்துள்ளே னின்பிறவி
நன்றாய்தி யென்று னகைத்து. 440

என்னாற் குலக்கிழுக்கு மெய்துமென, வீமனே
உன்னாவி போக்க வுளனென்ன—கின்னுடலை
விட்டுவா னிசரது வில்லிறுத்தேன் போர்வென்று
நாட்டுவாய் சர்ப்பமென்றா னல். 441

வந்தேதன் விட்டிலுறு மாயற் கறிவிக்க
குந்திமனை கண்ணன் குறுகியே—தந்தையில்
கன்னிப் பருவக் கதைசொல்லிப் பஞ்சவர்க்கா
கன்னன்பா லேவினான் காண், 442

தருமனை யீன்றதிருத் தாய்வந்தா ளீண்டென்ன
வருக விடுமினென வாங்கு—திருவனைய
குந்தி தனைக்காணக் கூப்பி யெதிரெழுந்தான்
முந்தியவள் காண்பதற்கு முன். 443

ஆராத வன்பி னடிக ளடியேன்பால்
வாராதீர் வந்தவா றென்கொலெனச்—சீராரும்
பாண்டவர்த மேவலோ பாரளந்தா னேவலோ
வேண்டிவந்த தென்னென்றான் வேந்து. 444

என்னுடைய தாய்மா ரெனச்சொல்லி வந்தவர்கள்
தன்னெலும்பு தாங்கினார் தாமில்லை—என்னுடைய
தாயாவீ ரிந்தத் தகுமாடை தானுடுக்கில்
சேயாவன் யானுமெனத் தேர்ந்து. 445

தன்னுடைய முன்னே படாம்போர்க்கத் தார்வேந்தன்
என்னுடைய மாதா விவளென்று—நன்னுதலாள்
பொன்னடிமேல் வீழ்ந்தானே போந்தெடுத்து மோந்தவனை
தன்னடிமேல் வைத்தா டளர்ந்து. 446

ஆவி யனையார்க ளைவருக்கு முன்றோன்ற
மேவி யனைய வினையேனை—பாவியேன்
முன்செய்த தீவினையால் முன்புரையா தின்றுரைத்தீர்
என்செய்வேன் சொல்லீ ரினி. 447

இன்று னெனவறியா வென்னை முடிகவித்து
மன்னர் வணங்கவே மானித்து—பின்னையும்
தன்னெச்சி லுண்ணுத் தகைமையான் றுனுண்டான்
என்னெச்சி லென்னே டினிது. 448

மைத்தடங்கண் மாதேவி வார்துகிலை யான்பிடிக்க
வற்று விழுந்த அருமணிகள்—மற்றவற்றை
கோக்கவா வென்றுரைத்த கொற்றவர்க்கெ ன்னுருயிரைப்
போக்கேனே வெஞ்சமத்திற் போந்து. 449

வந்த விதம்வேண்டி மாதாவே செல்லென்ன
வுந்தம்பி யைவரையு முய்விப்பாய்—முந்தமரில்
வெந்திறன்மா நாக மிரண்டாவ தெய்யாத
விந்தவரமீ யென்றா ளின்று. 450

மற்றவர்க ளெல்லா மருதென்னை வாய்த்தவரம்
பெற்றாய் பெறல்பேச வேண்டுமோ—கற்றபோர்
வெல்லுங் கணையொருக்காற் றொட்டா லு நால்வரையு
கொல்லேன்நும் மானை யென்றான் கூர்ந்து. 451

அம்மேநீர் வேண்டிற்று பெறநீ ரதுவீந்தேன்
உம்மையுநான் வேண்டுவ தொன்றுண்டு—செம்மை
யலர்கதிர் வேற்கையா னர்ச்சுனனால் பட்டால்
முலைதருவீர் பல்லோரின் முன்பு. 452

உன்னுடைய மைந்தற்கிவ் வுண்மை தனையுரைக்கில்
என்னவர்கள் பாக மெனக்கீவார்—பின்னதனை
யீங்கெனது தோழற்கே யான்கொடுப்பே—னுதலினால்
ஆங்கவர்கட் கில்லை யரசு. 453

பாம்பு கணையிருகால் பற்குணன்மே லெய்யாமல்
ஆம்போரில் பின்னால்வ ராவிதனை—ஓம்புவரம்
கன்னன்பால் பெற்றதனை கண்ணனிடங் கூறினாள்
அன்னபுகழ் பாண்டுமனை யாள். 454

கண்ணனது ஏவலால் கன்னன்பா லிந்திரனும்
நண்ணு முதியோனாய் நண்பகல்மேல்—நண்ணவே
ஏவலர்சென் றுள்ளேயினிய முனி காண்டற்கா
ஆவலுடன் உற்றுரைத்தா ராங்கு. 455

என்றார் விடுவென்ன விந்திரனு மென்னடையால்
பின்றாழ்ந்த காலம் பிழைபொருப்பா—யென்றானைக்
கன்னன் மகிழ்ந்தானாய் கண்ணியனே வுன்போல்வார்க்
கின்ன நியதியெலா மின்று, 456

நற்பேர்நின் போல்வார்க்கு நல்குவதே கேண்மியனென
விற்பனனுங் கன்னன் விளம்புதலும்—எற்கு
கவசமுங் குண்டலமுங் கண்ணியதா வென்றான்
சவிதாசே யீந்தானே தான். 457

வானின் றசரீரி, வானவர்கோன் றன்மகற்காத்
தானின்னை யேற்றுள்ளான் தாரற்க—நானுன் றன்
மெய்த்தாதை காப்பான் வேண்டினே னென்றபின்னு
கைத்தாதா யீந்தானே காண். 458

எள்ளளவும் லோபர்கடா மீயா ருயிரெனினும்
வள்ளல் கொடுப்பார் மனமுவந்து—கொள்ளற்கு
பாரி குமணனே பாரிற் றதீசியுநற்
பேரிதனாற் கொண்டார் பிற. 459

ஏற்ற முதியோனு மிந்திரனாய் வேலொன்று
ஏற்ற துனக்கென்று யீந்தருளி—சாற்றியபின்
கண்ணன்பாற் சென்று கருணன் கொடைகூறி
விண்ணவர்கோன் சென்றானல் விண். 460

அன்றரவ கேதனனு மாலோ சனைசெய்து
பொன்னரவ பள்ளியற்குப் பொய்த்தவிசு—நன்றியற்றி
மல்லர்பலர் தான்வைத்து மாயவனைக் கூயங்கே
சொல்லா விருவென்றான் சூழ்ந்து. 461

ஏற விறங்கிற்றே யெத்துணையோ மல்லலர்தமை
சேர வமைத்தகுளி செல்கையினில்—கூறற்கு
வொண்ணா வியப்பாக வுற்ற தலைகால்கை
கண்ணா முகமோடு காண். 462

கண்ணெல்லாந் தீப்பிறக்க கைகளோ ராயிரமா
விண்ணூர வெய்யோனொளி மறைக்க—மண்வேண்டுந்
தூதுவனா றன்று தோற்றும் வகையதனை
யோதுதலு மாமோ வுணர்ந்து. 463

அண்ட முறநிமிர்ந்த வாயன் றிருமேனி
கண்டும் வயவேந்தன் கைமறியா—வெண்டயிர்கள்
தோய்ந்திருந்த வாறே துவக்குண்டார்க் கிம்மாற்ற
மேய்ந்திருந்த தென்றா னெடுத்து. 464

ஆன்றோர் துதிப்ப வசுவத்தா மன்னைக்கூய்
நோன்றாற் கருள்முதல்வ னேக்கியே—சான்றா
படைத்தலமை தாங்கற்குப் பஞ்சவர்பால் நின்போல்
கிடைத்திலவா னென்றான் கிளர்ந்து. 465

ஆழிதனை வீழ்த்தி அசுவத்தா மன்காண
மீள விசும்பதனை மேனோக்கி—வாழி
பரிவேட மிட்டதுகொல் பாரென்று காட்ட
திருவாழி நீட்டினான் சென்று. 466

மறையோன்சேய் செய்துள்ள வஞ்சனையைக் கேட்ட
விறையோன்பால் சொன்னா னியல்பா—இறையோய்
மண்ணின் மேல்வீழ்ந்த மணியாழி தாவென்றான்
நண்ணியவா வொன்றறியே னான். 467

பஞ்சவர்பால் மீண்டணுகி பாபிதுரி யோதனன்சொல்
எஞ்சாது கூறி யிதவிதுரன்—அஞ்சாது
வில்லிறுத்த செய்கைமுதல் மேவியதெ லாமுரைத்தான்
வெல்லுறிதி யன்னைசெயல் விட்டு. 468

காந்தாரி மைந்தன் கன்னன் முதலானோர்
வேந்தர் பலரோடு மேலெண்ணி—ஆந்தாது
பஞ்சவர்க்கு ஞானம் பயிற்றி வனஞ்செல்ல
சஞ்சயனை விட்டானே தான். 469

நான்முகனோ டொத்தானை நால்வேதம் வல்லானை
தானெதிர்கண் டன்பாற் றலைவணங்கி—ஞானவனுக்
காதனமே நல்கி அறமகனுஞ் சஞ்சயனை
போதுகவே தென்றான் புகன்று. 470

வேதியன்சீர் சொல்லும் விதுரன் பெருஞ்சொல்லும்
கோதில் குருகுலத்தார் கோன்சொல்லு—மாதா
பெருஞ்சொல்லுங் கேளாது பின்னிகழ்ந்தான் மாமன்
அருஞ்சொல்லால் போரிற்கே வாங்கு. 471

போருற்றாற் சுற்றங்கள் பொன்றுமே யெஞ்சாது
சீருற்ற பெண்சேய்கள் திங்கடைவர்—வேரற்ற
நன்மரஞ்சேர் கானொப்ப நாசமா மிவ்வுலகந்
தன்மனே தேரென்றான் தான். 472

ஓர்ந்துள்ளே னிச்செய்தி யுத்தமனே யோர்சிறிதும்
னேர்ந்திலனே கான்வதிய னின்மொழிபோல்—சேர்ந்திடற்கு
மன்னாய்ப் பிறந்துள்ளே மைந்தருள ரெங்கட்கு
மன்னாய்நீ சொல்லென்றான் ஆய்ந்து. 473

மீண்ட முனிவரதர் வித்தாரமாய் விளம்ப
பாண்ட வரின்பலமும் பாகத்தால்—நீண்டுவருஞ்
செய்தியெலாங் கேட்டுந் திரிமனத்தான் போகவிட்டான்
யெய்திடற்கு மன்னவர்பா லேடு. 474

தருமனு மோலை தனைவிட்டான் கண்டோர்
வருவீர் படையோடு மன்னர்—இருகாலும்
மால்வணனும் வேண்ட மயிர்முனைக்கு மண்கொடா
போர்மன்ன னோடு பொர. 475

மன்னன் றருமனது மாவசனங் கேட்டவுடன்
மன்ன ரணேவோரு மாவோடு—வன்னரதங்
குஞ்சரமுங் காலாட்கள் கோடானு கோடியதா
வெஞ்சிலேயோ டாயினர் வேந்து. 476

கரியிரண்டு நான்குபரி காலாள்பன் னூறு
ஒருதேர் பதாதியி தொன் றின்—நெறியா
பதாதிசே னைகுன்மம் பாரனனிகி னியென்
றிதாகுமே மும்மூன்று மெண். 477

அன்ன வனிகினிநா ருயிரந்தா னக்ரோணி
யின்னவகை யேழைவர்க் கிண்டிற்றே—அன்னதற்கு
வென் றி கொளுந்தலேவன் வில்விரா டன்சேயை
நன் றுணர்ந்து நேமித்தா ரால். 478

சோத ரற்கோன் றியாத்துரியனும் போர்வெலர்க்குச்
சோதிடங் கேட்கத் துருவினன்—சோதிடத்தில்
சாதேவ னுமவன்பால் தான்தெரிவி ரென் றுரைக்க
போதேக வல்லடைந்தான் போய். 479

தன்னுற்ற முன்னேனே சாதேவன் வந்தித்து
என்னுற்ற சொல்லென்று னிப்போரில்—முன்னுற்ற
வுங்களேயான் வெல்லுதற்கு வோதென்று னல்லோரை
அங்கவனு மாய்ந்துரைத்தா னல். 480

பின்னுவா நாப்பண் பெரும்பலிதான் துர்க்கைக்கு
மன்னுரோ மத்தெதிரோன் மாத்தசையை—பின்னமிலா
தூட்டுவையே லுன்னே யுதிட்டர னுர்செயிக்கார்
நாட்டுவி ரென்று னயந்து. 481

நல்லரவா னுமென்ன நாடியவ னில்புகுத
சொல்லரவா னேத்திச் சுயோதனனே—சொல்விரா
நாயேன்பால் நாட்டம் நயப்பி ரெனவுரைத்தான்
ஆயதுரி யோதனனே யாங்கு. 482

மெய்த்தாதை நீரன் றி வேறில்லே தேகத்தை
வைத்திருந் தீதற்கு மாண்பாமோ—சித்த
மிருந்தா லுமதேயா மித்தேக நீங்கில்
வருந்தாதி ரென் றுரைத்தான் மன். 483

அன் றுதரு மன்சபையி லாயனர் நீபொன்ற
வுன்றம்பி நாளிட்டா னென்னார்க்கு—நின்றுபலி
தன்னே யிடுவென்றுன் தம்பி திருத்தனேயன்
என்னயான் செய்வ தினி. 484

என்னுற்றுர் தீதிலார் என்றுலகம் போற்றற்கு
முன்னுற்ற மாதுனேயு மூழ்வலியே—என்னுற்ற
மாதவனே மாயவனே மாமறைக ளத்தனேயு
மோதவனே காவென்று னேர்ந்து. 485

ஒன்னார்க்கு நன்னுடா னேதுகிற வுத்தமனே
நன்னுட் கணியென்று னாரணனு—மன்னார்பால்
கூறியநாண் முன்னே கொடுக்கக் களப்பலிதான்
சீரியநாள் வென்றியென்றுன் றேர்ந்து. 486

தற்பணஞ் செய்தற்குச் சாற்றப் புரோகிதனுர்
தற்பரவின் றில்லையுவா தானென்ன—தற்போது
பஞ்சாங்கம் பாரென்ன பார்த்து வியந்தாரா
யெஞ்சாதன் றேசெய்தா றேய்ந்து. 487

அன்னாளே போந்து அணங்கிற் கரவானைச்
சொன்னுர் பலியாகத் தோன்றியே—தன்னுக
அன்றிரண்டோ டாறைந்து அங்கத்துச் செங்குருதி
வென்றியா யீந்தான் விரைந்து. 488

தங்கட் கெனப்பெரிய தம்பந் தனைநாட்டி
அங்கவற்றி னுச்சிமுர சாடவைத்துத்—தங்க
மயன்வந்து செய்தபோர் மண்டபத்து சேர்ந்தா
ரயனுந்தி கொண்டவனே டாய். 489

ஈதறிந்த கண்ணிலிசே யெய்தியுள பன்னொன்று
வோதக்க ரோணியுட னுற்றுனே—மாதனிக்கு
ஆனை பலிசெய்தே யாங்கமைந்த பாசறையில்
தானமர்ந்தான் கன்னனுடன் றுன். 490

சேனையைக் காண்பதற்காச் செய்துள்ள மேறளத்திற்
றுனெய்தி யாங்குவருந் தாதைபால்—கோனவனும்
இந்தவிரு சேனையெல்லாம் யார்மாய்ப்ப ரெவ்வளவில்
முந்தவுரை யென்றுன் முனைந்து. 491

ஏற்கொருநா ளாகு மிருபடையும் வெல்லற்கு
விற்குருவு நாண்மூன்றில் வென்றிடுவா—ரக்கருணன்
முன்னுநா ளைந்தா முனிமகனுக் கோர்கடிகை
துன்னுலகம் பற்குணற்குத் தூள். 492

சேனைக் கதிபதியா தோர்ந்துள்ள வீடுமனும்
தானை யணிவகுத்த தந்திறத்தை—யானைபரி
மன்ன ரிருக்கும் வகையெழுதித் தன்றுணை
என்ன வுயர்த்தா னெடுத்து. 493

அதிமா சம்ரத்த ரானரதி யீற்றில்
விதியாதன் போர்கண்டு விம்மிச்—சதியாகக்
கன்னன் கருதியிந்த காங்கேயன் மாளுமட்டு
முன்னப் பொரேனென்று னோர்ந்து. 494

நற்றருமன் காங்கயனை நண்ணிப் பணிந்தேத்தி
யுற்றருளுந் தாதாயு னேடிருக்கப்—பெற்றிலேன்
வெல்லும வகையுண்டோ வென்றேத்த நெஞ்சுருகிச்
சொல்லுந் தனக்குற்ற சூள். 495

நீயே யரசாள்வை நின்னதே யிவ்வுலகம்
சேயேயா விரைந்திற் றிர்வனெனப்—போயவனும்
விற்குருவை சேவித்து வேண்டினா னாசியினை
சற்குருத விறுபுகன் றான். (பகவற்கீதை)
கண்ணில்லான் பாரதப்போர் காண்பான் வியாதமுனி
எண்ணினா னெய்துதலு மேத்தியே—விண்ணப்பஞ்
செய்தா னவாவினவா தேறற்குச் சஞ்சயனை
உய்திபெறக் கூறென்றா னோர்ந்து. 497
புண்ணியப்பார் சென்றடைந்த புத்திரரு மற்றோரு
நண்ணியகூ றென்றவர்க்கு நன்முனியு—மெண்ணியே
வந்த இருபடையின் மத்தியிலே மால்தேரை
தந்தான் விசயனுரைத் தான். 498
போரிற்கா யிங்குப் பொருந்தினா ரெல்லோரும்
மோரிற் குருதாதை யுற்றாரா—மாரிரவல்
அன்னவரைக் கொன்றாளு மாட்சிபெற லிற்கானம்
தன்னி லடைதலினி தாம். 499
என்றானை யிச்சபல மேனுற்ற தன்றனக்கு
என்றானக் கண்ணா னிதுவெனக்கே—வொன்றாது
ஏது மறியேனை யெண்ணி யொருபொருளா
மாதுயரந் தீரென்றான் மன். 500
சீவனுக்கு தேகஞ் சென்ன மரணமென்ப
வோவலின்றி யுண்டாமுணர்வாய்நீ—பூவில்
உறங்கு வதுபோ லுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு. 501
ஆடை கிழிந்தா லகற்றிவே றுக்குவபோல்
பீடையா மெய்நீக்கி பின்பெடுக்கு—நாடுங்கால்
சீவ னிறப்பதிலை சேதிக்க வொண்ணாது
சீவனிறந் தாலுற் சிவம். 502
மாயையாற் றோன்று மனந்தானே சஞ்சலமா
நீயென்று நானென்று னேயம்வைத்துப்—பேயென்ன
பூதத்தா லுண்டாம் பொருளாகி யானெனதென்
றோதலா லுண்டா முலகு. 503
சீவன் சிவனாகுந் தேகமுத லாராயின்
யாவரும் என்னின்வே றாவதிலை—நீயுன்று
மெவ்வுலகு மெப்பொருளு மெப்படையு மெல்லாமு
மிவ்வுருவிற் காணென்றா னிங்கு. 504
தேவ ரனைவருடன் சீவப் பிரிவினையும்
ஆவுலகி லுண்டான வத்தனையு—நாவதனா
லுன்னா லொருபாலில் வுண்டாக்க மற்றொருபால்
கண்ணன்பா லச்சமுற்றான் கண்டு. 505

அன்பே யருளேயென் னுருயிரே மாதவனே
துன்பே விலக்குஞ் சுடரொளியே—முன்படியேன்
மாயா விடையா மைத்துனு வென்றுன்னை
ஆயாது சொன்னே னருள். 506

என்று துதித்தானை யின்னருளா லிதனை
நன்று மொழிவன்கேள் நானுக்கே—என்பொருட்டா
செய்த லெனக்குச் சேவித்த லிந்தியத்தை
நைதல் விராகமா நாடு. 507

ஓடு மனமடக்கல் யோகவினை கற்றிடுத
வீடுபுகழ் தேடுதலு நித்தியத்தை—நாடுதலுஞ்
சாந்தமொடு சந்தோடஞ் சாதுசங்கந் தன்னாலு
மாந்தரடைவ ரென்றான் மற்று. 508

நீக்க மறநிறைந்து நிற்கும் பரம்பொருளை
தூக்கமூண் விஞ்சா நூல் சொன்னவணம்—ஆக்கமா
எண்ணமே தானா யிருப்பா னென்னைச்சேர்வான்
திண்ணமே ஞானந் தெளி. 509

நல்லோர்நன் றூற்றெய்வ நிந்திப்போ னஞ்சொப்பான்
சொல்வீ டெரியிடுவோன் சோதரற்—கில்லாது
தாயங் கவர்வோன் றமக்குத் துணைபுரிவோ
னுயவரைக் கொல்வ தறம். 510

சர்வ வுயிரினுநான் தங்குந் திறனறிந்தும்
சர்வவுயிர்க் கிதமா தாநடந்துஞ்—சர்வவுயிர்
துன்புறு வண்ணத்திற் றெண்டாற்று நல்லோனு
னிற்புற வீடெய்துமென்றானே. 511

முற்றிற்று.

## வீடும பர்வம்.

---

உந்திக் கமலத்தி லுற்பவிக்க வேதாவை
தந்துலகங் காக்குந் தயாபரனே—யிந்தவுடல்
வைகும் பொழுதே வாழ்த்த வுனதடியைச்
செய்குவான் வேண்டினேன் செய். 512

சங்கொலியும் போற்பறையுந் தாக்கத் திசையனைத்தும்
கங்கை விராடன்சேய் காவலனு—அங்காக
வாளபிமன் வீடுமனுர் மாரதத்தில் பூட்டுபரி
மாளவிட்டான் கூர்ங்கணைதான் மற்று. 513

சல்லியனு முத்தனுரந் தாமுடன்று நிற்கையிலே
சல்லியன்றேர் சல்லிபடத் தாக்கினன்—சல்லியனு
வேலொன்றை யேவினான் மின்னலென வுத்திரனு
மாலென்று வீழ்ந்தானே மாய்ந்து. 514

செம்பொ னெடுந்தேரிற் சிவேதன் செருக்களத்துத்
தம்பி யவியத் தரியாதே—தம்பியைத்தான்
கொன்றான்மே னாட்செய்தான் கூற்றுவனைக் காலினல்
வென்றான்முன் னாட்கொடுத்த வில். 515

மத்திரத்தான் பின்காட்ட மச்சன் மகனோடு
நத்திப் பனைக்கொடியோ னல்கினன்—யுத்தந்தான்
சேனா பதியிருவர் செய்தறனை கூறற்கு
யானா மதியுடையே னாங்கு. 516

தேவாதி கந்தருவர் சித்தர் கணம்போற்ற
நாவால் வசுக்கள் நவின்றாரே—மாவிலிது
பஞ்சவர்சே னாபதிக்குப் பாம்பணிவோ னிந்துள்ளான்
எஞ்சானவிய மின்றி யெண். 517

ஊடல் நிவர்த்தியினு மொப்பற்ற நன்மைக்குங்
கூட மணவினையைக் கூட்டுகினும்—யீடழிய
தன்னுவி யுற்ற தருணத்தும் பொய்மெய்யா
மென்னுஞ் சுருதி யென. 518

தன்றோழர் சொல்லுஞ் சாத்திரமு னன்காய்ந்து
குன்றும் விலியிடம்வில் கொண்டேற்று—நின்றானே
வில்லல்லால் நின்தந்தை வேறு பயிற்றிலனோ
வில்வல்லான் மச்சத்தார் வேந்து. 519

மாற்றான் சொற்கேட்டவில் மானத்தாற் கண்சிவந்து
தோற்றத் தன்மீசை துடிதுடிக்க—சாற்றிநீ
வாட்போரில் வாவென்ன வைவாளைக் கையுருவி
நாட்பேர வந்தா னடந்து. 520

தன்றாற் படவிருக்குந் தன்மையாற் காங்கேயன்
வின்றாணைக் கோத்து விரிஞ்சன்சொல்—தன்றனை
மந்திரத்தால் மச்சன் மகன்சிரத்தை துண்டித்தான்
தந்திரத்தா லத்தாதை தான். 521

மக்க ளிருவரையு மச்சர்கோன் றானிழந்த
துக்க மதுகண்டு சோர்வான்போல்—மிக்க
தடவரைமே னின்ற தழற்கதிரோன் மன்னு
குடவரைமேல் விழ்ந்தான் கொதித்து. (2-ம் நாள்)

பாண்டவர்கள் மைத்துனனை பாஞ்சாலர் கோமானை
ஆண்டகையை சேனா பதியாக்கி—மூண்டெழுந்த
போர்வீர ராங்கண் பொருபடையைக் கொண்டணைந்தான்
கார்மேனி வண்ணன் களத்து. 523

வில்வேதம் வல்லானின் மேலுற்று தேரொன்றோ
வில்வேலும் வாளினங்கள் விட்டியே—வில்லாசான்
பின்காண நின்றார்த்தான் பேர்பெரிய வேள்வியினில்
மன்காண வந்த மறன். 524

பல்கோடி யானைப் படையேந்தக் காலிங்கன்
மல்லாட வீமன் மலைந்தானே—கொல்ல
அரிமா புகுந்ததென யாவும் பிளிரி
கரிமா கலங்கினவே காண். 525

தும்பிக்கை தானறுந்துந் தோலானனம் பிளந்தும்
வெம்பி மதமா வெருண்டோடி—பம்பத்
துரியோ தனன்சேனை துக்க மிகவால்
நரியோட்ட மோடினவே நன்கு. 526

மத்தகயங்களொடு மாண்டானே காலிங்கன்
சுத்த வயவீயன் றோள்வலியை—நத்திப்
பரணி படித்தாரே பாவாணர் கூடி
தரணியுளார் கற்றிடவே தான். 527

பற்குணன் பாற்றுதை பன்னேரம் போர்புரிந்தார்
விற்குருபாற் பாஞ்சால வீரனும்—விற்குருவின்
மைந்தன்பாற் சாத்தகியும் மத்திரனை வாளபீமன்
பைந்தாரார் போர்புரிந்தார் பார். 528

வில்விசய னன்று விளைத்த பெரும்போரைச்
சொல்லிசையா விண்ணோர் துதித்தாரே—அல்விசய
பானு கடற்புகுந்தான் பார்த்திபர் தானையுடன்
ஊனுண்ண போனா ருவந்து. (3 ம் நாள்)

மூன்றுநாள் முன்னே முடையா ரிடும்பிமகன்
கான்றுன் பலபகழிக் காங்கயன்மேல்—ருன்றேரில்
கோணகங் சித்தரித்த கோமான் கடோர்க்கசனை
நாண தறைகூவி னன். 530

தன்னெதிர்த்த சீயந் தனைவிட்டு தந்தியின்மேல்
மன்னுமா வென்னவா மன்னவர்கோன்—பின்வாங்க
எய்தா னிகழ்ந்தா னெடுத்தான் படையாவுங்
கொய்தான் கடோற்கசனுங் கூற்று. 531

அன்று துரிய னகப்பட்டா னென்னுமுன்
சென்று பனைக்கொடியோன் றேர்கொடுத்து—வென்றுனே
வீமன்சேய் தன்னை மிகுந்தா ரவரவர்கள்
நேமத்தால் போர்செய்தார் நின்று. 532

தாதை மனங்கொதித்து தாக்கினா னர்ச்சுனனை
வூதைசேய் பின்னுனு மூங்கடைந்து—தாதைமேல்
அன்றென்றே வாளா விருந்திட்டா னக்கண்ணன்
நின்றுன்ன நேமிவர நேர்ந்து. 533

பொன்னிறத்தோன் பொற்கண்ணன் கஞ்சன் பொருதிறல்சேர்
தென்னிலங்கை மன்னன் சிசுபாலன்—மின்னுபுகழ்
ஆயிரந்தோள் வீரனுடன் அன்றுநீ கொன்றருள
தாமிருந்து செய்தார் தவர். 534

என்றந்த காங்கேய னேத்தியா னச்சபையில்
அன்றழித்த வாக்கிற்கா வாயுதத்தை—யின்றெடுத்த
தேவே யெனத்துதிக்கச் செல்லென்று னர்ச்சுனனின்
மாவே துறந்துள்ள மன். 535

தன்னை மறந்தானே சக்கிரங்கண் டத்தாதை
பின்னை மனுளனின் பேருன்னி—அந்நேரம்
யானைமுத லான வணிகளையு மாங்குள்ள
தானையுங்க லக்கினன் தான். 336

இன்று படைகலந்து யேவலின்றி தாந்தாமே
நின்று பொருதலினை நேர்பகர—வொன்றுளதே
சேனு பதியின்றித் தேர்விசயன் முன்கொதித்து
மேனு ளசுரரைக்காய் வில். 337

தொடுத்த கொடுஞ்சிலைநாண் தோள்புரள வாங்கி
எடுத்த திசையனைத்து மெய்ய—நொடிக்கணக்கில்
வில்லிழுந்து நாணிழுந்து விரச் சிலையிழுந்து
சொல்விழுந்து போனர் சுளித்து. (4 ம் நாள்)

ஈரிரண்டாம் வைக லெழுந்து வினைமுடித்துப்
போரிரண்டு பக்கலும் பூண்டவே—ஆறிரண்டு
வெள்ளப் பெருக்காலே மேவிக் கொதித்தனபோல்
துள்ளி யெழுந்தாங்கே சூழ்ந்து. 539

காங்கேயன் றன்சேனை காருட மாகிற்க
ஓங்கர்த்த சந்திரனு வுண்டாக்கி—பாங்கெல்லாம்
வீம னபிமன்னன் வேந்தர் பலரோடுந்
தாமனலா விட்டார் சரம். 540

அன்றிருபா றத்தமக்கு ஆனவரை போர்புரிய
வென்றெழுந்தார் சேனை வெருண்டோட—தண்டதரன்
புற்றிச வாய்த்துடைத்துப் போவதனை நாற்றுவர்முன்
உற்றெதின் முற்றினு னாங்கு. 541

முன்னுட் கடோற்சகனுல் மோதுண்ட தென்னுமல்
முன்னேன் புறகிடலு மூண்டனரீர்—மன்னொண்மர்
வந்தெதிர்க்க வில்வளைத்து மாட்டினன் பாணத்தைத்
தந்திகளைச் சிம்மமெனத் தான். 542

மத்திரத்தான் மாமன் பகதத்தான் வந்தெதிர்க்கச்
சித்திரத்தே ரீடழிக்கச் சென்றுரே—அத்திரத்தில்
வீமன் கடுஞ்சினத்தை மேலெண்ணிக் காய்கநிரோன்
தாமக் கடல்புகுந்தான் முன். 543

காந்தாரி சேய்பலருங் கால்சாய்ந்தா ரென்றறிந்து
விந்தா ளரசனது மெல்லடியில்—சோர்ந்துவிழி
இன்றிதுவேல் நானை யிறப்பரே கான்மகனுல்
கொன்றென்று ளோலமிட்டுக் கூய். (5 ம் நாள்)

சர்ப்பமா யூகந் தனையிட்டான் காங்கேயன்
விற்பனனுங் காருட மேவகுத்தான்—சர்ப்பத்தின்
பன்னான்கா வந்தானே பாரத்து வாசன்சேய்
முன்னாங் குருசகுனி மொய்த்து. 545

சர்ப்பத்தைச் சாடச் சிறகுந் தனிக்காலும்
பற்பலபேர் தம்மை பருந்தாக்கி—விற்பனனும்
பாஞ்சாலன் றன்மகனும் பட்சிச் சிரமாகிக்
காஞ்சான் பல -யனைத்துங் காண். 546

வெங்கலிங்கர் தம்படையும் வேல்வேந்தர் தம்படையுஞ்
செங்கலங்க லாய்மிதப்பச் சிறினான்—கங்கை
வளைவரைத்தண் சாரண் மணிகொணரு நன்னாட்
டிளவரசன் பாண்டவர்க ளேறு. 547

மாமானு மத்திரனு மான்றேர் திரிகர்த்தன்
கோமானுங் கோவேந்தன் தம்பியரும்—போமாறு
பார்த்தனைத் தாஞ்சூழ்ந்து பரிபவங்கள் பட்டுடைந்து
கோத்தொழிலுந் த்ர்மறந்தார் கூர்ந்து. 548

மாத்தரியின் மாதவியின் புத்திரனோ மைவர்மா
தீத்தனிலே வந்தவிரு சேயினையுங்—கோத்துணையாச்
சித்திரசே னனோடு தென்னனையும் பார்த்தனிடம்
நத்திவர விட்டா னயந்து. 549

வில்வல்லான் றன்மகனு வீமன் பெருமகனு
சொல்வல்ல வம்பு சொரிந்தார்கள்—கொல்வல்ல
நேரே கரியிரண்டு நேரேயுடன்று தமில்
போரே புரிவன போல். 550

போர்வென்ற வீமன் புலன்கவசம் தான்தக்ர
வீரைந்து வெங்கணைகொண் டெய்தார்த்தான்—கார்கண்ட
காந்தட் கடிமலர்க்கை காந்தாரி நாட்பயந்த
வேந்தற்கு முன்பிறந்த வேந்து. 551

ஒற்றைத் திகிரி யொளிமணித்தேரூர்வானும்
வெற்றிக் கடற்றானை வேல்வேந்திர்—இற்றைக்
கமையும்போ ரென்பான்போ லத்தமன வெற்பின்
சிமையம் புகுந்தான் சிறந்து. (6 ம் நாள்)

ஆறாநாட் காலைவினை யாற்றி யுணவருந்தி
நேரா விருபடையு நின்றனவே—பேராதி
வீமன்மேல் சென்றுடன்றான் விற்குருவு மாங்கனே
தாமன்பால் செய்தான் சமர். 553

விற்குருவு மாருதியு மின்னலென வட்டமிடச்
சற்குருவைத் தாண்டியே சார்ந்திட்டான்—பற்குனனு
நாகக் கொடியோனு நாற்கடிகை போரியற்றித்
தாகத்துடன் பிரிந்தார் தாம். 554

விற்போ ரபிமனிடம் மேவினு னல்விகர்கனன்
நிற்போ ரதிசயிக்க நேமியொடு—மற்போரும்
வாட்போரும் வேற்போரும் மற்றும் பலபோருஞ்
சேட்போது செய்தார் சினந்து. 555

பற்குண னு விடுமனும் பன்னேரம் போர்புரிந்து
விற்குணத்தா லாவியினை வீழ்த்திட்டார்—பற்கணத்தைத்
தேராட் கரிபரியுஞ் செய்த நிகழ்ச்சியினை
யாராற் கணித்தலொல்லு மாங்கு. 556

பாண்டியன் போரைப் பகரவோ பாஞ்சாலன்
தூண்டும் பரித்திறனைச் சொல்லவோ—பாண்டவர்க்
குற்றப்படைத் திறனை யோதவோ வொன்னுன்றன்
வெற்றிவலி கூறிடவோ மேல். (8 ம் நாள்)

ஏழாநாள் மாறுதல்வே றின்று விருநான்கி
னுளால் நடந்த நவிலுவேன்—ஊழாலே
தத்தம் வலியாரைச் சார்ந்து வுரையாடி
தத்தம் புகழ்சொன்னுர் தான். 558

தண்டிற் கதிபதியு சாற்றியநல் லூகமாக்
கண்டு வயவேந்தர் காத்தாரே—யுண்டான
வுற்ற பெரும்போரி னுய்வா னருமையென
கற்றதிறங் காட்டினர் காண். 559

மான்மகவா மன்னவன்பின் வந்தைவர் போரியற்றி
கான்மகனு லாவி கடந்தாரே—நான்முகனை
யின்றுனின் பின்னுற்றே னெய்தான் சரமாரி
யூன்று னுகப்பல்லோ ருங்கு. 560

சல்லியனு மந்தச் சகுனி சகோதரரும்
கொல்லி மலையத்தான் கொண்டுடற்ற—வில்லியர்கள்
தான்மாய வன்று தகர்த்தா னரவான்பல்
மேன்மாய விஞ்சையால் மீண்டு. 561

நாகக் கனிமகனுல் நாற்படையுந் தானெழுந்த
மேகம் வருவதுபோல் மென்மேலு—நாகத்தைத்
தன்றேரின் மேற்கொண்டான் முனையை யிசலென
சென்றேடி விழ்ந்ததனைத் தேர்ந்து. 562

அன்று விருத்திரனு லாம்போரென் றேயமரர்
நின்றரவான் போர்தன்னை நிச்சயித்தார்—சென்று
அலம்புதனு மோரரக்க னவ்வரவான் றன்னைச்
சலம்புரிந்து கொன்றுனே தான். 563

துரியன் கடோற்கசன்பாற் றேற்றுன் றுரோணன்
பிரியமா வீமன்மேற் பேசி—சிறிதலா
நேர முடன்றுற்றி னின்றுன் பரித்தாமா
கோரமுடன் வில்நாணி கோத்து. 564

பின்னெழுவர் விண்ணுற்ருர் பீமனு வின்றென்று
மன்னழுது தானையுடன் வந்துடன்ருன்—பின்னெழுந்து
சேதியான் கொங்கன் சிறந்த படைவீரர்
ஆதியா வுற்ரு ரவண். 565

பேரனுர் தாமும் பெரியா ரனைவர்களும்
வீரமாப் பற்குணன்றன் மேலுற்ருர்—கோரமா
நின்றெய்து பேர்பெற்ருர் நீள்பகலைச் செய்வோனும்
சென்றெய்தான் னக்கடற்கே தேர்ந்து. 566

கன்னன்பால் சென்றந்தக் காவலன்பின் னோர்செய்தி
முன்னம் பகர்ந்தேங்கி மூர்ச்சித்தான்—கன்னன்ருன்
பஞ்சவர்க்கே தாதை பரிந்துள்ளா னுங்கவனின்
னெஞ்சோர்ந்துங் காவல்தந்தாய் நீ. 567

அத்தாதை புற்கவ்வி லன்பனே போரேற்று
சத்தியமே வெல்வமெனத் தானுரைத்தான்—நத்திமிக
சென்றுரைத்தான் பாட்டனிடம் சீர்தூக்கி யத்தாதை
அன்றுரைத்தார் நீதிபல வால். 568

மாற்ரு னிடங்காலம் வாய்த்துள்ள தன்பலமுங்
கோற்ரு னுணர்ந்துபொரக் கூறிற்றே—நாற்ருனும்
எத்திறனு மான்ரோர்பா லாயா திறங்கிஞய்
வுய்த்திறனை நீயே யுணர். 569

இடும்பன் பகன்வீமன் யேற்ற சராசன்
கெடும்பார் மணிமாலன் கீசன்—அடும்போர்நீ
இன்னோர் பலமொன்றே யேற்ருெருவர் முன்வெல்வில்
அன்னோனுல் மற்ரோர்சா மாங்கு. 570

ஆமவரி லந்த வரக்கனுட னைவருயிர்
வீமன் குடித்துள்ள மெய்ச்செய்தி—கோமகனே
கந்தருவன் வித்தரித்துக் காட்டல் மறந்தனையால்
மந்தமதி யாயுணரு வாய். 571

வீரர் புகுமுலகு வேண்டிப் பொருமென்னைச்
சோரர் செயுஞ்செயலை சொற்றனையால்—ஈரமிலா
வன்னெஞ்சர் கூற்ற மறந்துநீ போரிற்கு
முன்னஞ்செ லென்ருன் முனைந்து. (9 ம் நாள்)

பூமி நடுநடுங்கப் போர்ப்பறைகள் நின்ருர்ப்ப
வீமன்செய் பாணம் விரைந்தோட—ஆமந்தத்
தானைத் தலைவனுந் தாதை கடுகடுத்துச்
சேனைமேற் பாய்ந்தான் சினந்து. 573

அக்கா லபிமன்மே லான வலம்புதனை
மூக்காலுந் தேருடைய மோதினுன்—சிங்காம
லோடினுன் மாய வுருவம் பலகொண்டு
சாடினுன் சாடினுன் ருன். 574

தங்கைகாண் பாவம்போற் கைதவங்க ளத்தனையு
தங்கை யிலாதகலத் தான்றேற்றான்—அங்கைவர்
தானைக் கதிபதியுஞ் சாடினா னென்றுரை
தேனாருக ரியாகத் தேர்ந்து. 575

பாட்டனா ரைவரையும் பாங்காத் தனித்தனியே
நாட்டம்வைத் தெய்தாரே நாணியற—வீட்டினனாய்
தேவப் படைகொண்டு தேர்விசயன் தேருடைத்து
மேவப் பணித்தான்பூ மேல். 576

சேமத்தே ரேறி திருத்தாதை யின்றெய்ய
பூமி இடுகிடுத்துப் போயிற்றே மாவைத்தான்
கண்ணன் செலுத்தினான் காண்டீபன் றானெய்தான்
விண்ணும் பதைத்தொதுங்க வே. 577

காலோடு கைதலையுங் காது முனைமூக்கும்
வேலோடு வாட்படையால் வீந்திட்ட—கோலத்தா
லந்தோ குறையுடல மாடுகிற பேய்க்கூத்தை
அந்தோ சொலற்கரிதே யாம். (10 ம் நாள்)

வாரணங் கூவ மறையோர்கள் வந்தித்து
ஆரணங்க ளாற்றுதிப்ப வாதித்தன்—தேரதனில்
பசன்றேறி மேல்வந்தான் தேயத் தரயரெலாந்
தன்றேரி லேறினார் தாம். 579

கங்கை பெருமைந்தன் கண்காணித் தெப்படையும்
செங்கையில் நாணிதனைத் தேர்ந்தெடுத்—தங்கைவர்
மேலுடன்றான் மால்மருகன் மின்னா மெனத்தாதை
பாலுடன்று தேரிழந்தான் பாங்கு. 580

துச்சா தனன்றேரைத் தாண்டி யருச்சுனன்மே
லுச்சாகத் தோடுடன்றா னும்பர்கோன்—துச்சாதன்
தேரழித்து வில்லொடித்துத் தேகந் தனைத்துளைத்துச்
சேரினத்தி லென்றான் சினந்து. 581

மற்று மவரவர்கள் மாச்சரிய மேற்கொண்டு
கற்ற பலபடையுங் கையோச்சிச்—செற்றமா
யானை பரிகாலா ளாங்குருதி கொப்பளிக்க
வூனைப் பறிகொடுத்தா ரங்கு. 582

கங்கர் கலிங்கர் கருநாடர் காம்போசர்
கொங்கர் குடகருடன் கோசலரும்—வங்கத்தார்
என்னென்று தாதை யியற்றியவா செய்தாரே
முன்னென்று தாந்தா முனைந்து. 583

சந்தனுவின் மாமகன்பாற் சார்ந்து சிகண்டியன்று
தந்தனுவா லாயுதங்க டான்பொழிய—தொந்தயுத்தஞ்
செய்தார் நெடும்போது சேதித்தார் சேனைகளை
மொய்தார்ச் சிகண்டி முனைந்து. 584

தேரழித்து வில்லொடித்துச் சேமிப்பைத் தான்கொண்டு
நேரிருந்து போரே நிகழ்த்தினுள்—பாரிருந்து
நோன்பியற்றி மேனு ணுதல்விழியா டன்னருளால்
கோன்பிறவி யுற்ற கொடி. 585

தாதை மனமுறுத்தல் தான்கோறல் கொல்லுண்ணல்
பேதையா லாவென்னும் பெற்றியே—யீதாக
செய்யும் பெரும்போரிற் சீர்த்தாதை மார்பகத்தில்
நையுங் கணைபாய்ந்த நன்கு. 586

தன்னிலைமைச் சோர்வெய்தி சாய்ந்தருளத் தேர்மீது
அன்னிலையிற் பாக னருகெய்தி—பன்னிரால்
வீசக் கலையாறி விற்கணைபே ரர்சுனனு
லாசற்றே னென்ரு னலர்ந்து. 587

அன்று கௌரவரோ டைவர்களு மாங்கடைந்து
நின்றுகண் ணீர்சோர நீண்முடிக்குத்—துன்ற
வுயர மமையென்ரு னெணகணையாற் பார்த்தன்
முயர மமைத்தானே யோர்ந்து. 588

அம்பாற் றிருவரணு மம்பாலே கொட்டகையு
மம்பாற் சயனமு மாக்கினுன்—அம்பாலே
காண்டா வனம்வேய்ந்த காண்டீபற் கிதரிதோ
நீண்டாயுட் டாதையுற நின்று. 589

ஆமளவுஞ் செய்தி யருளி யவரவர்க்கு
போமென்று போக விடைகொடுத்துக்—கோமுன்னம்
தந்தை வரந்தால் சவீதா மகரத்தி
லுந்தளவுஞ் சிவிப்பா னேர்ந்து. 590

அர்ச்சுனன் னீந்திட்ட வம்பணையி லேயிருந்து
நற்சுனையி னீரருந்தி நாராணன் றன்—பொற்கமலம்
எண்ணி யிருந்தா னேங்கி யிருபடையும்
எண்ணிப் பிரிந்தா ரியைந்து. 591

கன்ன னதுகேட்டுக் காங்கேயன் பாற்சென்று
பன்னு விழியுகுத்துப் பாதத்தில்—முன்னந்தான்
செய்த வெலாம்பொருத்து தேவேயெற்காசி மொழி
செய்தியெனச் சேவித்தான் றேர்ந்து. 592

நன்று சுயோதனற்கு நாற்ருனைக் காவலனய்
வென்றே யுனதுகுறி மேவென்ருன்—இன்றிந்த
மண்ணிற் பிறந்தபயன் வாய்த்தவா வுண்மகிழ்ந்து
நண்ணினுன் பாசறையே நன்கு. 593

பானு புதல்வன்ருன் பாட்டன் பகர்ந்தவணம்
சேனைப் பதியெனக்கே செய்யென்ருன்—கோனிதமா
வுன்னையல்லா லுற்றதுணை வுண்டோ குருவிற்குக்
கன்னனே யென்றழைத்தான் காண். 594

அன்றவனே டெய்திப்பின் னுசிரியன் ருள்பணிந்து
தன்றன் படைத்தலைமை தான்வகித்து—னின்றருள
வேண்டி யறுமுகனை விண்ணவர்கோன் சூட்டியவா
வேண்டிப் புரிந்தான் விரைந்து. 595

முற்றிற்று.

## துரோணர் பர்வம் 11-ம் போர்.

வேலை புரளாது மேதினிசேர் தானெய்த
காலைக் கதிராங் கரியோனே—நாலுமுகற்
காயவனே மாயவனே யாம்பொருள்க ளத்தனைக்குந்
தாயவனே நின்னடிதந் தாள். 596

நற்குருவின் றன்றித்தால் நாற்சேனை தான்வகுக்க
ஏக்களித்து கன்னனுமங் கெய்தானே—மிக்குளசீர்
பாஞ்சாலன் புத்திரனும் பண்பாகத் தன்றுனை
யாஞ்சாலங் காட்டினு னங்கு. 597

காவலர்கள் போரியற்றக் கண்ணில்லான் றன்பேரன்
ஆவ லுடன்போ ரபிமன்மேல்—ஏவலெல்லாந்
தாவிப் பொருத சுபத்திரையா டன்சேயு
மாவில் வளைத்தானுன் வந்து. 598

மந்திரத்தா லெய்யும் வாயு வருண னுடன்
இந்திர னேரம னினும்பலவா—அந்தரத்துத்
தேவப் படையெல்லாம் சிந்தித்து விட்டார்கள்
ஆவப் படைவிர ராம். 599

நல்லபிமன் சற்று நகைத்துப் படையாவுஞ்
செல்லச் சிதைத்துச் சிறுபோதில்—வில்லாலே
விறழித்துத் தேர்க்காலின் மேற்கொணர்ந்து கட்டினுன்
பேறெடுத்தா னர்ச்சுனற்குப் பின். 600

மன்மகனை மீட்க வயவேந்த ரெண்ணிலார்
வின்முனையி லாற்றாது மீண்டிட்டார்—தன்மகனை
காப்பான்வந் தாற்றி களைத்துப் புறகிட்டான்
காப்பான்குரு வந்தான் காண். 601

அக்குருவாற் றேரின் அச்சிறலும் வாளபிமன்
புக்குவேர் தேரேறப் போனுனே—அக்காலை
தப்பினே னுனென்று சார்ந்தா னிலக்குமணன்
வுப்பில்லா வூணாக வுற்று. 602

அங்கத் தரச னருச்சுனன் பாற்கனன்றுன்
சிங்கத் திடம்யானை சேர்ந்தனபோல்—மங்கித்தன்
சொற்சோர்ந்து பின்னுற்றுன் தூசாகத் தானைதான்
விற்சேர்ந்த பாணம்போய் மெய். 603

பார்வேண்டு மன்னிருவர் பாங்குற்றுத் தாமுடன்ற
போரிற் றரியன்றேர் போயுடைந்து—சோர்வுற்றான்
அக்காற் றருமன்றே ராங்குற்றுப் பற்றுதலும்
புக்கான் குருமீட்க போர். 604

மாமறையோன் கைக்கணைகள் வான்மாரி யாச்சொரிந்து
ஏமன்சேய் தேர்தன்னை யெய்தாங்கு—ஆமவனின்
கையுற்ற மன்னனைக் களைவுற்றுத் தன்றேரில்
வுய்வுற்றுச் சேர்ந்தானே யூங்கு. 605

என்னென்பே னுவி யிரிந்தும் பலப்பலவாம்
துன்னு முறுப்பெல்லாந் துண்டித்து—மொன்னுனை
வாதித் துயிர்நீங்கு மன்னர்களை யெண்ணியெணி
யாதித்தன் சேர்ந்தா னலை. 606

பாசறையில் விற்குருவின் பாங்குற்றுப் பாப்புயர்த்தோன்
கூசு மனநிலையைக் கூறினனுய்—மாசான
தன்னிலையைத் தானகற்ற தன்மனை கட்டுவித்து
என்முனி யென்றிரந்தா னேய்ந்து. 607

வீமனுட னர்ச்சுனர்க்கும் விண்மண்ணும் போதாவே
தாமனுக எவ்வாறு தன்மனினை—நீமகிழ
யான்தருவ லானுலு மவ்விருவர் சேணடையில்
கோன்தருதற் கெத்தனிப்பேன் கூர்ந்து. (12 ம் நாள்)

காகங் கரைய கனத்த விருளகல
மாகம் வெளுக்க வனமெல்லாம்—தாகமா
பாடப் பறவையினம் பச்சைப் பரிதூண்டி
ஓட விருள்வந்தா னாங்கு. 609

அக்குருவாற் றனை யணிவகுத்து மேலெழும்ப
சற்குருவின் செய்தியெலாந் தானுணர்ந்து—பற்குணனை
எச்சரித்து போரிற் கெழுந்தா னறன்மகனு
முச்சரித்து நாரணனை யுள். 610

இந்திரனுர் சேயை யிகல்செய்து சென்றடைந்தார்
தந்திரமீக் கொண்டுள்ள தாயத்தார்—பிந்திவரும்
வீமனையுங் கூயங்கே வில்லால் பகதத்தன்
தாமணைந்தான் காதவழி தான். 611

அபிமன் கடோற்சனை யாங்குற் றறைகூய்
உபவேந்தர் போரிற்கா வுற்று—ரிபமேறும்
வீரர் பரித்தலைவர் வேந்த ரவரவர்கள்
நேரப் பொருதினர் நின்று. 612

கைவிஞ்சிக் கான்மகனைக் காய்ந்தான் பகதத்தன்
வைவஞ்சி யெண்ணினு னரணனை—தெய்வஞ்செய்
நேர மிதுவென்ன நேமியான் றேர்கடவி
வீரமிகப் போந்தான் விரைந்து. 613

கண்டான் பகதத்தன் காண்டீப னுற்றதனை
விண்டா விருவரையும் விண்ணுலகு—கொண்டாள
சேர்ப்பனென்று வேலைச் செலவிட்டான் கோபாலன்
ஏற்பனின்முன் மார்பகத்தி லேய்ந்து. 614

பூவா நிராயுதன்மேல் போய்ச்சேரு மவ்வேல்தான்
கோவே யவையுன்னிக் கொண்டேற்றேன்—தேவேந்தன்
ஈந்துள்ள வேலாகு மித்துணையே யின்றுகுஞ்
சாந்துணைநாள் தீரென்றான் தான். 615

தீக்கடவுள் தந்தருளுஞ் செல்வக் கணைதன்னைப்
போக்கி யவ்வுயிரைப் போக்கினான்—தாக்கியே
வந்த முனிமகனின் மாபோ ரியற்றினான்
இந்திரனை வென்ற யிறை. 616

தன்மனைத் தான்பிடிக்க சற்குருவஞ் செய்தாரே
நன்மனத்தில் நாரணன்வாழ் நற்றருமன்—வின்முனையில்
போர்புரிந்தா விடு பீகலற் கரிதரிது
யார்புரிவா ரார்புரிந்தா ராங்கு. 617

விற்குருவை நற்றருமன் வெங்காணச் செய்தான்விண்
நிற்கு மவர்புகழ்ந்தார் நீள்பகலோன்—அற்கொடுத்து
ஏகினா னன்னே யியைந்தபடை யத்தனையும்
ஏகினார் தம்மிடமே யெண். (13 ம் நாள்)

மேனாட்போ லொன்னார்மேல் விம னருச்சுனனும்
போனார் நெடுந்தூரம போரின்மேல்—ஆனாத
வேதக் கொடியானு மேகம்போ லம்பெய்து
மாதன்மன் கூயினான் வந்து. 619

தன்னையே நாட்ட்மா சார்கின்ற மாமுனிமே
லென்னைவ செல்லுதிநீ யின்றென்றான்—முன்னயனுந்
தந்தை பணிந்தகல்வான் சாரதிபா லன்னிமித்தம்
சிந்தைகனிந் தோதினான் தேர்ந்து. 620

முற்றந்தை வாய்மை மொழியாற் றிரும்பலிலேன்
விற்றந்த வக்குருபால் மேவென்றான்—உற்றந்த
மேலோனை வந்தித்து வில்லிற் சரங்கோத்து
வேலோனைக் கால விரைந்து. 621

தன்மனிலு மிக்கானுஞ் சாதுரிய னுமபிமன்
வின்முனிலார் முன்னிற்பார் விற்குருவும்—சொன்முதல
எண்ணிலா மந்திரத்தா லேவப் படையனைத்து
மெண்ணில்வி னுயினவே யின்று. 622

சற்குருவுஞ் சேயுஞ் சகுனியுஞ் சல்லியனும்
திற்குண துச் சாதனனுஞ் சோமதத்தன்—விற்குனித்து
நல்லபிமற் காற்றுது நாணிப் புறமிட்டார்
பல்லரச ரானார் பலர். 623

அங்கர்கோ னுள்ளிட் டரசர் குழாமெல்லா
மெங்கடா போவ தினியென்று—அங்கலறச்
செய்தானவ் வில்வித்தை தேறற் கறிதம்ம!
கொய்தா முயிரெனைத்தாங் கூறு. 624

இத்தருணம் வீமனும்வந் தெய்தா வணந்தடுக்க
கத்தரீ கொன்றை கடவென்றான்—மைத்துனனின்
எண்ணப் படியே யியற்றினான் சிந்துமனன்
உண்ணெகிழ்ந்து வீமனுரைக் கும். 625

என்னொருசேய் கொல்வா னெண்ணி யரன்மாலை
பன்னுருவீ ருந்தமது பாலரெலா—மின்னலுற
மாயுமே லின்றியெம் வாளபிமன் றேற்கானென்
றேயுமா கூறினா னீண்டு. 626

கொற்றக் குரங்குயர்த்தான் கோமதலை கோளரவ
வெற்றிக் கொடிக்கொண்டான் மெய்மகனை—யுற்று
தலைபுரண்டு வீழச் சரந்தொட்டா னுங்கோர்
மலைபுரண்டு வீழ்வதுபோல் மாண்டு. 627

மன்னர்பற் பல்லோர் வளர்த்த யிளவரசர்
வன்ன வணமாக வந்துடன்று—மன்னபிமன்
விற்போருக் காற்றாது வீந்தார் தனித்தனியே
எற்பேரோன் பேரனின்றி ஈண்டு. 628

ஆரியன் மீண்டு மபிமனிடம் போர்செய்து
தேருடைத்துக் கிணிற்கச் செய்திட்டான்—சீரபிமன்
கையொன்றை வீட்டினான் கன்ன னொருகரத்தால்
னையப் படைவென்றான் நன்கு. 629

சேத்தரசன் பின்னின்று சேதித்தான் வாளபிமன்
மாத்தலையை யந்தோ மாவீரன்—வீந்திடலுந்
தேவ ரியக்கர் சித்தகண மேலிருந்து
ஆவென்று யேங்கினா ராங்கு. 630

தாதைவா னின்றிழிந்து தானே கொடுசென்றான்
வூதை மகன்முதலோ ருன்னியுனி—வேதையுடன்
சொல்லிச் சொலிப்புலம்ப துக்கம் பொராதவனாய்
எல்லுங் கடற்கானா னீண்டு. 631

கூவித் தனயமைத்த கோபால நந்தர்களை
ஆவி யழித்தா னறுமூன்று—காவதம்போய்
காண்டீப மோய்வாக கண்ணன்றேர் பின்கடவ
நீண்ட வழியானார் நேர். 632

வந்த வழிதனிலே மாலெண்ணம் போலியற்றி
யந்தணனா யிந்திரனு மங்கிவிழ—முந்துவனை
விட்டிழிந்து பார்த்தனந்த வேதியனை தானிறுத்த
வீட்டினான் தான்கொண்ட சூள். 633

எல்லா வகையாலு மேற்ற திருப்புதல்வன்
னல்லா னறுமூன்றி னாசமுற—வல்லானை
ஏன்பிரிந்து வாழ யிறத்தலே நன்றென்றான்
கோன்பரிந்து நீதிசொனான் கூர்ந்து. 634

தோன்றலழி வென்னுஞ் சுருதியெலாங் கற்றுள்ள
வான்றவுணர் வோயிறத்த லாகாவே—நோன்றக்கா
லெத்தனிக்கும் நன்மைதா னெய்தலா மென்றிருக்க
புத்திரனா கிட்டான் புகல். 635

அந்தணனுங் கேட்டவ் வருச்சுனனைத் தானோக்கி
தந்தமக்கு நேர்ந்தக்கால் சாத்திரத்தை—வந்தெண்ணார்
கூறுவது மற்றோர்க்கே கோவேயென் றந்தணர்க்கு
தேறவுரைத் தான்சபதந் தேர்ந்து. 636

மாமறையோய் பேதமையால் வாய்புலத்தி மன்னவனான்
சேய்மறைந்தா னின்போல செய்யலுறேன்—மாமறையே
சான்றென்ன வேதியனுஞ் சாந்தியுற்று அத்தேரில்
ஊன்றிவரச் சேர்ந்தா ருவண். 637

ஆங்குற்றுச் செய்தி யறிந்துள்ள பற்குனனு
மேங்குற்று மூர்ச்சித்து யேனெனக்கு—தீங்கிழைத்தீர்
யீசனது மாலை யியற்றியவா கேட்டுளனேல்
மோசவரா தென்றான் முனைந்து. 638

மைந்தன் சிரங்கொய்த மாபாவி யாமந்த
சிந்து மனன்சிரத்தைச் சேதித்துக்—கொந்திலனேல்
நாளை யொருபகலில் நான்மாய்வே னக்கினியில்
கோழையல வென்றான் கொதித்து. 639

கண்ணனுட னர்ச்சுனனுங் கைலைக்குச் சென்றதற்பின்
எண்ணித் தரும னிடும்பிமக—னண்ணக்கூய்
ஒன்னார்பாற் சென்றாங்கு வுற்ற துரைமினென
அன்னானுஞ் சென்றானே யாங்கு. 640

ஆங்குள்ள காவலர்க ளச்சமுறத் தான்றாதா
யிங்குவந் துள்ளே னிடும்பனென—பாங்குவிட்டு
அத்துரிய னுந்தை யறவுரையைக் கூறென்ன
வித்தகமா சொன்னான் விரைந்து. 641

தன்சேயைக் கொன்ற சயிந்தவனை நண்பகற்குள்
வின்முனையில் விட்டிடுவேன் வியானேல்—தன்னுயிரை
அக்கினியிற் சேர்ப்பேனென் றர்ச்சுனன் கண்ணனுடன்
முக்கணன்பாற் சென்றான் முனைந்து. 642

இத்தை மறைத்தா லெய்து மிழிவென்றே
நத்தியறி வித்தார் நவிலுனது—மைத்துனனார்
எஞ்சினனாக் கொள்ளென்றா னெட்டுணையு மச்சந்தா
னெஞ்சினிலே யில்லாதா னின்று. 643

பார்த்தன்சேய் வீந்தபினே பாராளச் சேயுண்டோ
வார்த்தை வலியுடையோன் மைந்தற்கா—தீர்த்தனிடம்
வாங்கப் படைக்காக மாமலைக்கு சென்றுனு
மேங்கப் படுவனென்று னேய்ந்து. 644

கன்னன் மொழிந்தபினே காவலனுந் தூதுவனை
என்னி லுரிமையுள்ளோ னித்தரைக்கு—மன்னெல்லா
மஞ்சுந் திறனுள்ளோ னுங்கவனின் றந்தையிவ
னெஞ்ச விடான்றவத்தா லென்று, 645

மைந்தனே யாக மடிவனெனச் சொல்லென்று
னிந்தவுரை கொள்ளா யிடிம்பியின்சே—யந்தமுற
இன்றிரவே கூற்றுவனூ றெய்துவிப்பே னும்மவரை
வென்றிடற்கு பார்த்தனென்னே வேறு. 646

நல்லரக்க னில்லேல் நடவென்ற மன்னவற்கு
சொல்லரக்க ருன்போல சொற்றவரார்—அல்லலுற
நீர்புதையார் நஞ்சூட்டார் வீட்டில் நெருப்பிடார்
பேர்புதைய சோதரரைப் பின். 647

சூதாட்டஞ் செய்வித்துச் சொத்தை யபகரியார்
கோதை கொழுந்திதுயில் கொண்டுரியார்—தீதான
காரியந் தன்னேடு கைதவங்க ளத்தனையும்
பேரியனே வுன்னதென்றுன் பேர்ந்து. 648

தூதன் செலத்துரியன் துன்னென்று மேலோர்பால்
மாதன்மன் கூற்றிதுவேல் மைத்துனனை—தீதின்றி
நாளை பகல்காப்பின் நம்பக்கல் வெற்றியென்று
னூழின் வலியறியா னூங்கு. 649

கன்னன் றுரோணனெடு காப்பெண்ணி வீரரெலாஞ்
சொன்னகு ளொவ்வொன்றுஞ் சோதித்து—அன்னவரி
னெண்ணத்தா லாக மியற்றி யொருபகலுந்
திண்ணமாக் காப்பதென்றுர் தேர்ந்து. 650

அங்கணன்பால் வந்த வருச்சுனனைத் தான்பார்த்து
சங்கரனு மங்கோர் சலநிலையிற்—றங்கியுள
மாபடையை கொள்ளென்ன மாமுனியா வந்திடுமச்
சாபமுடன் மந்திரமுந் தந்து. 651

என்னேரா னின்னே டிருக்கின்றுன் வெல்வாய்நீ
மன்னே எனவாசி வாக்கருளி—பின்னேவ
ஆழ்வாரின் மீதமர்ந்து ஆங்குற்றுர் சுக்கிரனு
கீழ்வானிற் றேன்றக் கிளர்ந்து. 652

ஆமுரச கேதனனை யவ்வீரன் றுள்பணிந்து
போம்போது கண்ணன்கால் பூசித்த—லாம்பூக்கள்
முக்கண்ணன்பாற் காண்டல் முகமைந்தா னுத்திரவு
மக்கணத்தில் யாவுமறைந் தான். (14ம் போர்)

சந்திரனூர் வந்தென்ன தானே வகைபலவா
பந்திசெய்து தக்காரை பாங்கிருத்தி—முந்தியே
காக்கு முனிவர்மேல் காண்டீபந் தான்வளைத்து
போக்கி வணங்கினன் போந்து. 654

இன்று விடக்கவி ரென்றிரந்து வேண்டினனே
நன்று செயித்து நடவென்றான்—கன்றுமந்தப்
போரிற் கடந்துதேர் போயினவே நாற்காதங்
காரிற் கடிதாகக் காண். 655

கான்மகன்றான் ஆசான்மேற் கன்றிப் பொருதிடலும்
நான்முகனே டொத்தானு நன்றென்று—கான்மகனின்
வில்லிறுத்து தேருடைத்து மேலுங் கணைதூவ
மல்லுறுதோ ளானடைதான் வந்து. 656

தேரோடு மேலெறிந்தான் சேனாபதி தன்னை
யாரோ டுவமைதா னுக்குறுவேன்—சீரோடு
விஞ்சை வலிதன்னால் மேவினன் பார்மீது
கஞ்சமல ரானருளால் காண். 657

ஊணின்றி காலருந்தி வொற்றைக்கா லால்நின்று
வேணின் றெடுத்தவி லும் வேற்படையு—தாணுவொடு
தேவி முதலான தேவர்களி னல்லருளால்
மாவலியும் பெற்றோர்கள் வந்து. 658

முற்பட்டு தாந்தாமும் முந்தப் பொருதியே
பிற்பட்டு வென்காண பேசலரோன்—பிற்பட்டு
சாயத் திருமாலும் தாகந் தவிறென்றான்
நேயத் துடன்பரிக்கு நீ. 659

நீருக் கதிபதியின் னீண்ட கணையெடுத்து
பாருக்குள் விட்டானே பங்குனனுங்—கூறற்கு
வேருவமை யென்னென்பேன் மேலேறி யூற்றெடுத்து
பேருங் குளமான பின்பு. 660

நீருண் டிளைப்பாறி நேமியான் பூட்டுந்தேர்
காரன் றிடித்ததென கர்ச்சித்த—நீருண்டு
வந்த படையுள்ளார் வாயார வர்ச்சுனர்க்கு
தந்தார் புகழுரையே தான். 661

கன்னன்போர் செய்தந்தக் கான்மகனால் பின்னிட்டான்
மன்னன்பின் வந்திருவர் மாய்ந்தாரே—அன்னவனால்
உண்டாந் துயர்தீரிய வேதக் கவசத்தை
கொண்டேகச் சொன்னான் குரு. 662

வேதனது மீக்கோளை வில்வல்லான் பாற்பெற்று
போதுந் துரியன்றான் பொங்கியே—மோதும்போர்
செய்தா னருச்சனனின் றேர்மேலு மாமேலு
மெய்தான் பலபகழி யேய்ந்து. 663

ஆங்கிருவர் போரி லரவக் கொடியோனுந்
தாங்கும் பலமாய்ந்து சாரதியா—லாங்கவனின்
றன்கவசஞ் சாடத்தவித்துப் புறகிட்டான்
மன்விசன முற்றறிவு மாய்ந்து. 664

பூரிசவா மாயப்போர் பூண்டுள்ளான் சாத்தகிமேல்
நேரிதெனக் கண்ணனால் நிச்சயித்து—பூரிசவா
மாயுமா சாடினன் மாலை வயங்கிற்றே
காயுங் கதிர்மறையக் காண். 665

சிந்துமனன் போரிற்குத் தேர்விசயன் முன்வந்தான்
அந்திவந்த பாசறைநீ யாகென்றான்—பிந்தாதே
கொல்லிவனைப் போதுளது கூறுமவன் றந்தைகை
செல்லியவா செய்வாய் சிரம். 666

அவ்வண்ணமே செய்தா னலரோன் பணைத்துணையா
எவ்வணமிங் குற்றனனென் றெண்ணிடவே—மைவணனுஞ்
செய்தானென் றோர்ந்து திரியோத னின்றிரவே
கொய்வனென்றான் பற்குணனைக் கூய். 667

பகல்வத்தி மூட்டினார் பாங்கிருபா லன்று
தகவென்று போரினுக்குச் சார்ந்தார்—உகவெண்ணி
எங்கும் படைவிரப்பி யெய்தா னிடும்பிமகன்
கங்குல் சகாயமாக் கண்டு. 668

வில்வலியும் வேல்வலியு மின்னுலாம் வாள்வலியும்
மல்வலியு மொன்னாரை மாய்வலியுஞ்—சொல்வலியன்
வைகறைக்கு முன்னே கடோற்கசன் மாய்ப்பனென
செய்வ தெணித்தூரியன் றேர்ந்து. 669

அங்கத் தரசே யருணன் வருமுன்னே
செங்கை வடிவேலை சேர்த்திட்டு—பொங்குற்ற
வீமன்சேய் வீட்டலையேல் மீகாம னிற்கலம்போல்
ஓமஞ்செய் நெய்யுறுவோ முற்று. 670

வெங்கதிரோன் புத்திரனு மேவிக் கடோற்கசனை
தங்கையின் வேற்கொண்டு தாக்கினன்—அங்கவனு
மிந்திரனி னுலிறகு இற்றுவிழு மாமலைபோல்
நந்தலுற்று விண்சென்றானல். 671

போரிலே பட்டோர் புகுதற் கிடமின்றி
வீரசொற்கஞ் சேர்த்தியற்ற விச்சுலனைக்—கோரினார்
மாகத்தா ரென்றாங்கு மாய்ந்தா ரெணப்படுமோ
நாகத்துச் சேடனுக்கு நன்கு. 15 ம் போர்

மூவைந்தா னட்டான் முனிவ ரணிவகுத்து
பூவந்த தன்பிறவி போக்குவான்—தேவந்து
அன்றிரா சொன்ன வருண்ஞானந் தானுன்னி
அன்றிறவே தானடைந்தா னுங்கு. 673

தத்தம் பகையுன்னித் தானடைந்தார் போர்வீரர்
யுத்தப் பறையொலிமே லோங்கிற்றே—நத்தி
விராடன் றுருபதனை வீட்டினன்விற் போரிற்
றுரோணமுனி யென்பான் றுளர. 674

யாகத்திற் றோன்று மருமந்த புத்திரனு
மேகித்தன் தாதை யிணையடியில்—சோகித்து
சற்றுக வைவர்களுந் தானமுது தேற்றிடத்தேர்ந்
துற்றான் குருவின்மே லூங்கு. 675

கூறும் படைகள்பல கோடானு கோடிவிட
தேரும் பரிபாகன் தேகமெலாம்—பீருமல்
பக்குவ மாதடுத்தான் பாரத்து வாசன்சேய்
அக்கலைதன் வல்லமையி னால். 676

ஆதித்தன் பாணத்தைச் யாசான் சிரமிலக்காய்ச்
சேதித்து வீழ்த்தினான் தேர்மீது—வேதத்தே
ஐவரும் வேட்டற்கா வக்கினியி லுண்டான
மைவிழிக்கு முன்பிறந்த மன். 677

கால மதுவாக கால்சாய்ந்தா னக்குருவு
மால முயிர்நீக்கா வாயுளுறின்—காலத்தால்
சேனா பதிவீழ்ந்த செய்தியறிந் தேங்கினான்
மானக மேலுயர்த்த மன். 678

பாங்குறறு வந்த பரித்தாம னேவென்று
மோங்குற்ற தியா யுயிர்ப்பித்தே—யேங்குற்றும்
அந்திக் கடன்வழுவா தாற்றி யலமந்து
சிந்தித்தே யேறினான் தேர். 679

தந்தையைக் கொன்றான் றளமெல்லாந் தானவிய
வந்தியா வேவினான் வான்கணையை—முந்தைநாள்
சொல்லாலுங் கண்ணன் றொடர்பாலும் வாளாவா
செல்ல விருந்தனவைத் தேர்ந்து. (கர்ன பர்வம் 16ம் போர்)

தந்தவத்தா லுண்டான சக்திக் கணையாவு
முந்தவமே யாக முனிமகனு—வெந்துளந்தான்
பொய்த்தனவே யென்றுதவம் பூண்டாற் கெடுத்தோதி
வைத்தான் வியாதமுனி வந்து. 681

ஆதித்தன் சேனா பதியா மகன்றிறத்தை
சோதிப்பான் கீழ்கடலிற் றோன்றினான்—மீதித்த
சேனா முகங்கூட்டித் திட்டதுாய் மன்னவனு
சேனா முகமானான் றேர்ந்து. 682

கண்ணில்லான் செய்முறையே காவல் படைதனக்கு
கண்ணியமா கன்னனுக்குக் கட்டினான்—கன்னனன்று
தேவசே னாபதியாஞ் செவ்வே ளெனத்தோன்றி
ஆவ லுடன்வந்தா னங்கு. 683

மன்னர் வியப்பெய்த மாகத்தார் மானிக்கக்
கன்ன னணிவகுத்தான் காசிமனன்—கன்னமத
மாவூர்ந்து கான்மகனை வந்தழைத்தான் போரிற்கு
மாவூர்ந்து வீமன் வர. 684

மாமலைகள் நேரே மலைவனபோல் மாமேகந்
தாமலைந்து நின்றாற்போல் தந்தியின்மேல்—வீமனுடன்
வாரணத்தா னின்று மலைந்த பெரும்போரை
யாரெணத்தால் நிச்சயித்த லாம். 685

விஞ்சை வலிதன்னால் வின்முதலாம் போர்புரிந்து
பஞ்சையெனக் காசிபனைப் பார்விட்டான்—எஞ்சாது
கான்மகனின் மாவைக் கதையா னெறுக்கினான்
நன்முகனின் சொல்லுள்ளா நன்கு. 686

பின்னிருவர் பன்னேரம் பேரிடியாக் கர்ச்சித்து
மன்னவரிற் காசிமனன் மாண்டானே—அன்னவனின்
சேனைவெங் கண்டோடத் தேற்றினான் பானுவின்சேய்
சேனைமுன் கொண்டுவந்து தேர். 687

கன்னன் நகுலன்வெங் காணவே போரியற்றிப்
பன்னுந் தனஞ்சயன்மேற் பாய்ந்தானே—அன்னானும்
கூர்ங்கணையால் முக்கால் கொடித்தேரைத் தானுடைத்துப்
பார்ங்கணை போகவிட்டான் பார்த்து. 688

சல்லியனுஞ் சாத்தகியுஞ் சாதேவன் றுச்சாதன்
வல்லியலில் பாண்டியனின் மேற்சகுனி—கொல்லிவரை
மன்னன் கிருதவன்மா மாமுனிசேய் வீமனுடன்
இன்னவா சேர்ந்துடன்ற னின்று. (17ம் போர்)

வேதஞ் சுருதியொடு விண்ணோருந் தான்றுதிக்க
நாதங் கடற்கேட்க நற்பரிதி—போதலுமே
அன்றரவ கேதனனு மாடம் பரத்தோடு
சென்றடைந்தான் கன்னனுடன் சேர்ந்து. 690

வந்துற்ற மாபதியின் மாட்சியினை நோக்கியுளம்
வெந்துற்று மன்னனெடு மேலெண்ணி—சந்துற்று
மத்திரத்தான் சாரதியாய் வந்துற்றால் போர்முடித்து
அத்திபுரி யாள்வையென்றா னங்கு. 691

நன்றென்று மன்னவர்கோன் நன்கெய்தி சல்லியன்பால்
நின்றிரந்தா னோர்வரம்நீ நேரென்று—அன்றாய்ந்து
மன்னன் கனன்று வலவனு கன்னனுக்கு
என்னவா நன்றென்றானே. 692

பாக னெஜமானும் பார்த்திபன் சாரதியா
னாகக் கொடியோனே நன்றந்த—பாகன்சேய்
யென்னை வெலுவானே லேற்றிடுவேன் மாத்தொழிற்கு
அன்னவன்பா லென்றானே யாம். 693

என்றுன் கரம்பற்றி யென்பொருட்டால் கண்ணன்போல்
சென்றுக வென்று கிரியோதன்—நின்றேத
மத்திரத்தா னந்த வணங்கா முடியோனுக்
கோத்துரைத்தா னென்செய்வா னூழ். 694

சல்லியனைச் சாரதியாய்த் தான்பெற்றுப் பானுவின்சேய்
சொல்விசையச் சூரியன்போற் றோன்றினன்—வல்லவரில்
போற்றப் படைப்பதிதான் பூதலத்தி லில்லையென்
றேற்றப் படைவகுத்தா னேய்ந்து. 695

மாமுனிசேய் பற்குணன்பால் மாமுனிவர் தேவகணை
தாமுனிவா லேவத் தனஞ்சயனக்—கோமுனியைத்
தேவப் படைகொண்டு தேருடைத்து வில்லிறுத்து
மேவவெங் கண்டான் விரைந்து. 698

வந்த கவுரவரில் வானேக வொன்பதின்மர்
தந்தான் சிறுபோதிற் றண்டதரன்—வெந்துளந்தான்
துச்சா தனன்கண்டு தோமரத்தாற் றாக்கியே
அச்சோட தேரழித்தா னங்கு. 699

சூதாட்டத் தன்று துயிலுரிந்த பாதகனைக்
கோதாட்டச் செங்குருதி கோனுன்னி—மாதாட்ட
வில்லமரு மல்லமரு மேவக் கதாயுதத்தால்
வெல்லமரு ளேற்றினன் விண். 700

துச்சாதனன் சிரத்தைத் துண்டித்துக் கைதனிலே
வைச்சான் பலர்காண வாதித்தான்—பிச்சேற
மாகுருதி கொப்பளித்தான் மன்னர் திகைப்பெய்த
ஆகுருதி தோய்ந்தா னவன். 701

கன்ன னதுகண்டு கான்மகனை வந்தெதிர்ந்தான்
அன்னு ளுருத்திரனு யாங்கவன்றேர்—பின்னமுற
வில்லிறுத்து வாளிறுத்து மெய்யெலாம் புண்ணாக்கி
அல்லலுற விட்டா னவன். 702

பாண்டியன் கேகயர்கோன் பாஞ்சால னுள்ளிட்ட
பாண்டவரின் பின்றுணையைப் பானுவின்சேய்-மீண்டோடத்
தந்திரத்தா லெய்தான் றனஞ்சயனு நேர்வந்து
தந்திறத்தால் மாவிறுத்தான் றான். 703

சேமப் பரிபூட்டித் தேர்கடவச் சல்லியனுந்
தாமப் பரியோட்டுஞ் சாரதியா—நேமியனை
நண்ணிச் சரந்தூவ நாணிழந்தா னக்கன்னன்
கண்ணன் படைத்துணையால் காண். 704

தொன்னாட் பகையிருவர் தொந்தம் புரிவதனை
மன்னோர் கணித்திடுவர் மாகத்தார்—வுன்னரிது
என்றே வியந்தா ரிருவரினும் பானுவின்சேய்
நன்றேற நின்றான் நரன். 705

கண்ணனிடம் பார்த்தன் கருணன் றருமனென
வெண்ணமிடக் காண்கின்றே னின்றென்றான்-கண்ணன்றேர்
செல்லத் தருமபிரான் றேர்ந்துன்கை காண்டீவம்
வில்லல்ல வென்றான் வெகுண்டு. 706

என்னோன் பறிந்து மிகழ்ந்தானே வில்லென்னா
சொன்னான் கனன்றுதன் சூள்முடிக்க—மன்னவனுந்
தான்றுறக்கத் தேரிழிந்தான் சாந்திசெய்து மாலவனு
னூன்றுறக்க கன்னனையே வுற்று. 707

ஆவேச மேற்கொண்டவ் வர்ச்சுன னேவுகணை
பூவே நடுக்குமுறப் போயிற்றே—சேவல்லான்
யீந்த கணைதொடுத்தா லென்று முலகென்று
வேந்தரே பேசினார் விண். 708

பற்குணனின் கண்டத்தில் பாப்புக் கணைதொடுத்தான்
சிற்குணனுந் தேர்புதைக்கச் சென்றதுவே—பற்குணனின்
மேன்முடியைக் கொண்டவன்பால் மீண்டு விடாதனவால்
தான்மடிய நேர்ந்தனவே தான். 709

சற்குருவின் சொல்லோ தனஞ்சயவி னற்றவமோ
அக்கருணன் தேர்புதைய வவ்வலவன்—புக்கனன்பார்
காண்டீவன் சாயகத்தால் கன்னனுடல் சோர்வெய்த
வேண்டித் துதித்தான் மிக. 710

ஊசலெனத் தன்னாவி யூடாடுங் கன்னன்பால்
தாசனென மாலுற்றுத் தாதாவே—பேசெனது
வல்வினையால் நின்னுடல மாசுற்ற தென்றேங்குங்
கல்வியன்பால் காட்டினான் கை. 711

வந்தவனை யீண்டுள்ள மாநிதியங் கேளென்ன
வுந்து மகமியற்ற வுன்னினேன்—எந்தையே
நின்றருமங் கோடியென நீண்ட முடிதுளக்கி
அன்றவனு மீந்தானே யாம். 712

காட்டித் தனதுருவங் கன்னனே வேண்டியன
கேட்டியெனு நாரணன்பாற் கேட்டானே—மீட்டுந்தான்
இல்லையென்னாக் கையு மனமு மிருந்திடு
வல்லைப் பிறவியருள் வாய். 713

என்றேற்றுத் தாதாக்க ளெய்தும் பதம்புகுந்தான்
சென்றேற்றுச் சாரதியுந் தேர்கடவ—நன்றேற்றித்
தேவர் மலர்மாரி பெய்தார்க ளிச்செய்தி
தாவதுரி யன்னமுதான் றான். 714

தன்றாமுன் மாய்ந்திடம்போய்த் தாழாநீ மாமன்னன்
இன்றேனெனைப்பிரிந்தா யென்றென்று—துன்போடு
தோற்றேனா னென்றுரைத்தான் றொன்மாதா மன்சிரத்தை
ஏற்றே யிரங்கியேங் கும். 715

அன்னைகூறத் தான்கேட்டங் கணமினார் பாண்டவர்கள்
கன்னன் பிறப்பந்த கண்ணனா—லுன்னியே
மன்னீர மாக்கி வருந்தியபின் செய்தார்கள்
தன்னீருந் திக்கடனுந் தான். 716

முற்றிற்று.

## சல்லிய பர்வம் 18-போர்.

தந்துணையா வந்தோருந் தம்பிகளும் விற்குருவு
மந்தமிலா வீரர்பல ராளுத—நந்தோழன்
பட்டதுய ருன்னிப் பரிதவித்தான் பாழ்மாமன்
இட்டபடி யாழ்வோ னெணி. 717
சல்லியற்குச் சேனா பதிபட்டந் தந்தருளி
வெல்லியற்கை யாயுள்ள வீரர்களை—கொல்லியற்கு
தான்கூட்டி முன்வந்தான் சல்லியனின் மேற்றருமன்
நாண்பூட்டி வில்லா னனி. 718
வந்துடன்று வெங்கணைகள் மாமேலுந் தேர்மேலு
நொந்திடற்கு விஸ்வாளு நாறினான்—பிந்திடவே
வெங்காட்டி சேமத்தோ மேலேறி வந்துற்றான்
மன்காட்டு மந்திரத்தார் மன். 719
ஏமன்சேய் தன்மே லெதிர்ந்தாற்றுஞ் சல்லியனை
மாமனே யுன்தவத்தால் மாயாது—காமென்று
வேலைச் செலவிட்டான் வீந்தானே சல்லியனும்
ஆலைக் கரும்பெனவே யாங்கு. 720
அசுவத்தா மாகிருப னக்கிருத வன்மா
பசுவித்தை கற்றபல பாலர்—சிசுபாலன்
தன்வினத்தார் மற்றைந் தராதிபரு மாங்குற்றுத்
தன்வினத்திற் சேர்ந்தாற்றுந் தான். 721
ஐவர் தனிவினையோ டுங்கடந்த மாமன்மேல்
கைகலந்து கியாடுங் காயல்ல—வுய்வதற்குக்
காணென்று தேவக் கணைவிட்டு சாய்த்தானே
ஆணொன்று தன்படைக்கா வோர். 722
வான் கொடிக்கு நல்லரா வைத்தெழுதுங் கோமானும்
ஊன்குடிக்கும் வியனென் றுன்னியே—தானொடிதா
சென்றோர் தடமூழ்கிச் சேவித்தான் மந்திரத்தை
புண்மரத் திக்குவான் போல். 723
ஐவர் அருவினார் அரவக் கொடியோனை
கைதவனைப் பாசறையுங் காணாது—செய்வதுணி
மாதவனைக் கொண்டு வனத்து மடுவதனில்
பாதகனைச் சந்தித்தார் பாங்கு. 724

அப்பொய்கை மேலே யைவர்களில் கான்மகனுஞ்
செப்பி யவன்செய்த திங்கெல்லாந்—தப்பாது
மான முளதோ மதியுளதோ தம்பினெல்லாம்
போனபினும் வாழ்திளென் ருன் போய். 725
தண்ணீரிற் செய்யுந் தவத்தோன் மனங்கொதித்துப்
புண் ணூர மேலுற்ருன் பொங்கியே—தொண் ணூற்று
பத்தா மவனுனே பாரென்று கான்மகனைத்
தத்தா கதையாலே தான். 726
சாரியிருபாலுந் தான் சுழன்று மேல்கீழு
மாறிப் பொருதடித்து மாகதையால்—சோரியது
பொங்கப் புரிந்தார் பொய்யா துயிர்கிலகள்
தங்க ளறிந்தாற்றுந் தாம். 727
பாஞ்சாலி மேனள் பகர்சாபந் தானுன்னித்
தாஞ்சாட வக்குரங்கிற் சாய்ந்தானே—பாஞ்சாலி
கூந்தலுக்குச் செங்குருதி கொண்டா னெருகரத்தில்
மாந்தலுக்கு நீரடித்த மன். 728
பாண்டவர்கள் மீண்டேகப் பாங்குற்று மாமுனிசே
யிண்டேனு மப்பதவி யீவாயேல்—பாண்டவரின்
சேனையெலாம் போக்கிச் சிரமைந்து முன்னெதிரில்
பானையென வைத்திடநீ பார். 729
அந்தோபொ ருமையினு லாங்கவர்க்கு வொப்பமிட்டான்
சந்தோடங் கொண்டுபரித் தாமாவும்—வந்தேதன்
மாமன் முதலான மாபடையைத் தான்கொண்டு
தாமுன் பொருதினுன் சார்ந்து. 730
ஈதாக வாங்கே யிருக்குந் திருமாலும்
போதேகப் பாசறைக்கு பூதத்தைக்—கோதேக
காவென்று வைத்தருளிக் கான்கொண்டங் கைவர்தமைப்
போவென்று விட்டான் புறை. 731
அந்தியத்தில் பட்ட மணிக்துள் மாமுனிசேய்
வந்தியற்ற பாசறையில் மாபூதம்—முந்துற்றுச்
சாடப் பொராதாங்கு சாம்பியே பின்னடைந்து
சேடப் படுமறையைத் தேர்ந்து. 732
தன்றந்தை யின்றேன் றனக்கருளு மந்திரத்தால்
பின்றந்து பற்கடிக்கை பேச்சின்றி—வென்றுந்து
சிந்தியா நிற்பச் சிவத்தின் றிருவருளால்
வந்தவாள் வாங்கினன் மற்று. 733
இந்திரன்றன் வச்சிரகே ரீசன்றன் வாளுேக்கிப்
பிந்திரங்கிப் பூதம் பெயரவே—மந்திரத்தால்
பாசறையிற் ருன்றயிலும் பாஞ்சாலி புத்திரன்றன்
மாசிரமுங் கொய்தானே வந்து. 734

வாளாற் றனித்தனியே மன்னர் சிரந்தடிந்து
ஆளியிளம் பஞ்சவரை யன்றுகொய்து—வாள்கொண்டு
சூள்முடித்தே னென்று சுயோதனன்முன் னேயடுக்க
நீள்முடிய்ய முற்றுந்தா னேர்ந்து. 735

பாதகனே மீளாப் பழிகொள்ளுந் தீயோனே
தீதறியாச் சின்னஞ் சிறுர்தலையை—நீதடிந்தாய்
போதிடுவா யென்றவனைப் போக்கிச் சுயோதனனு
மோதிடுவான் சஞ்சயன்பா லொன்று. 736

வேதமுழு துணர்ந்த மேலோனே யெந்தையிட
மோத லுலகத்தி லுண்டான—யாதெவையும்
மாய்தலென்ப கூறி மனந்தேற்றி யைவராஞ்
சேய்தனுல் சாந்தி செய. 737

என்றுங் குயிர்நீத்தா னிதாக வாங்கைவர்
கன்றுல் விளவெறிந்த கண்ணனுடன்—சென்றுங்கு
வுற்ற தறிந்தெழுந்தேறி யாங்கவனுல்
செற்றந் தவிர்ந்தானுர் சீர். 738

துஞ்சும் பொழுதாகச் சோதரனை மைந்தர்களை
யெஞ்சச் சிதைத்தானை யெண்ணியெணி—நெஞ்சந்தான்
நொந்திட்டாள் சாப முனைவின்றி நோய்நலிய
வந்தனன்சே யாகென் றவள். 739

எஞ்சினர்க் கெல்லா மீமக்கடன்செய்து
வஞ்சியாள் நின்றிருந்த மாநகர்போய்த்—தஞ்சமென
கண்ணிலிதன் முன்பணிந்தார் கான்மகனைத் தான்தழுவ
யெண்ணினேன் வாவென்று ளிங்கு. 740

வந்த வுருவத்தை மாவாக்கித் தானழுதா
னெந்தன் மகனேயோ வென்றென்று—நந்தகோன்
வீமனுளா னின்டுநீ வீட்டியன போலியுரு
வாமெனற்கு மாழ்கு மவன். 741

மன்னெல்லாங் கூட்டி மகிழுவோர் நன்னுளில்
பன்னு வரிசையெலாம் பாங்கியற்றிப்—பொன்னுலகு
மன்னவனே சூட்ட மணிமுடியைத் தர்மபிரான்
மன்னர்பதி யானுன் மகிழ். 742

தேசம் செழிப்பெய்த தேவற் கவிசார
மாசத்தில் மூன்று மழைபெய்யத்—பூசை
தவந் தானமோங்கத் தருமனர சாண்டான்
அவம் போக்கிவாழ லறம். 743

சுபம்! சுபம்!! சுபம்!!!

முற்றிற்று.